# தேவரகசியம்

(முதலிய கதைகள்)



प्रज्ञानं ब्रह्म

இயற்றியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

இயற்றிய

பிற நாடகங்கள்

| | | |
|---|---|---|
| விரத வீரர் பீஷ்மர் | ரூ. | 2-50 |
| ஏகலைவ்யனின் குருபக்தி | ... | 2-50 |
| தானவீரன் கர்ணன் | ... | 2-50 |
| பாண்டவ கௌரவ பெருமை | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் | ... | 2-00 |
| தவப்புதல்வர்கள் | ... | 2-00 |
| வாலிமோட்சம் | ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ... | 1-75 |
| விபீஷணன் சரணுகதி | ... | 1-50 |
| தபோபலன் | ... | 1-00 |
| மார்க்கண்டேயன் | ... | 1-00 |

---

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

இயற்றிய

பிற நாடகங்கள்

| | | |
|---|---|---|
| விரத வீரர் பீஷ்மர் | ரூ. | 2-50 |
| ஏகலைவ்யனின் குருபக்தி | ... | 2-50 |
| தானவீரன் கர்ணன் | ... | 2-50 |
| பாண்டவ கௌரவ பெருமை | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் | ... | 2-00 |
| தவப்புதல்வர்கள் | ... | 2-00 |
| வாலிமோட்சம் | ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ... | 1-75 |
| விபீஷணன் சரணாகதி | ... | 1-50 |
| தபோபலன் | ... | 1-00 |
| மார்க்கண்டேயன் | ... | 1-00 |

---

# தேவ ரகசியம்

( முதலிய கதைகள் )

இயற்றியவர்
ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா
1984



தபோவனத் தொடர் 7

| | |
|---|---|
| முதற் பதிப்பு | 1950 |
| இரண்டாம் பதிப்பு | 1951 |
| மூன்றும் பதிப்பு | 1953 |
| நான்காம் பதிப்பு | 1954 |
| ஐந்தாம் பதிப்பு | 1960 |
| ஆறும் பதிப்பு | 1962 |
| ஏழாம் பதிப்பு | 1975 |
| எட்டாம் பதிப்பு | 1981 |
| ஒன்பதாம் பதிப்பு | 1984 |

திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
காரியதரிசியால் பிரசுரிக்கப்பட்டது



விலை ரூ. 3-00

தபோவன அச்சுப்பள்ளி, திருப்பராய்த்துறை.

# பொருளடக்கம்

# தேவ ரகசியம்

விழித்திருப்பதற்கு ஒப்பு வாழ்வு. உறக்கத்திற்கு ஒப்பு மரணம். சாகப்போகின்றவர்களுக்குச் செத்தவர்களும் உயிரைக்கொண்டுபோம் யமபடர்களும் கண்ணுக்குத் தென்படுவார்களென்று கருதப்படுகிறது. அத்தகைய நிகழ்ச்சியொன்று ஒருக்கால் நேர்ந்தது. ஓர் ஏழை மாதுக்கு முடிவுகாலம் வந்தது. அப்பொழுது அவள் ஓலமிட்டதாவது:— "ஐயோ, எமதூதன் வந்துவிட்டானே! இனி யான் என் செய்வேன்? என் கணவனைக் கூற்றுவன் கொண்டுபோய் மாதம் ஒன்றுகூட இன்னும் ஆகவில்லை. உண்ண உணவின்றி, கட்டத் துணியின்றிப் பரிதவித்துக் கிடந்த பாவியேனுக்குக் காலமும் இன்று முடிந்தது. ஆனால் என் அருமைக் குழந்தையைப்பற்றி எண்ணுங்கால் என் உள்ளம் பதைக்கிறது. பிறந்த மூன்றே நாளில் இப்பச்சைக் குழந்தையை விட்டுப் பிரியப் போகிறேன். ஆதரிப்பாரின்றி அது இனி அழுது நைந்து மாயும். எமனுக்கு இரக்கந் தானில்லையா?" கல்லும் கரையும்படி கசிந்துருகி, அவள் கிளர்த்திய முறையீட்டைக் கேட்ட எமதூதனுக்கு மனம் இளகிவிட்டது. "இவள் இன்னும் கொஞ்சகாலம் உலகில் இருக்கும்படி விட்டுவிட்டுக் காலம் நெருங்கிவிட்ட வேறு ஓர் உயிரைக் கொண்டுபோவதே உசிதம்" என்று தூதன் தீர்மானித்து, அதன்படியே செய்து முடித்தான். ஆனால் எமலோகத்துக்குச் சென்றதும் அவன் கண்ட காட்சி யாது? எப்பெண்ணின் பொருட்டு அவன் மனமிரங்கிக் கட்டளையைமீறி நடந்தானோ, அப்பேதை இங்கு ஏற்கனவே எமலோகத்துக்குக் கொண்டுவரப்பட்டிருந்தாள். அவளது அந்திய காலத்தை

ஒத்திவைக்க அவனல் இயலவில்லை. யமதர்மராஜாவின் ஆணை அத்துடன் நின்றுவிடவில்லை. தூதன் நெறி வழுவியதற்குக் காரணம் யாது என்று வினவப்பட்டான். இரக்கத்துக்கு இயற்கையமைப்பு இடந்தராது என்னும் உண்மையை அவன் அறியவில்லை. தேவ ரகசியத்தை முழுதும் தெரிந்து கொள்ளும் பரியந்தம் அவன் பூமியில் வீழ்ந்து, மானுடனைக் கிடக்கக் கடவன் என்று சபிக்கப்பட்டான்.

குளிர் காற்ருேடு கூடிய மழைக்காலம். விர் விர் என்று வீசுகின்ற காற்று இரத்தத்தைத் தாண்டி எலும்பைப் போய்த் தாக்குகிறது. பொழுதும் விழப்போகின்றது. சந்தைக்குச் சென்ற தையற்காரன் ஒருவன் தான் எதிர்பார்த்த வியாபாரம் நன்கு நடைபெருமையால் வாரத்துக்கு வேண்டிய அளவு உணவுப்பொருள்களை வாங்கமுடியாது வீட்டுக்குத் திரும்பிப் போய்க்கொண்டிருந்தான். ஓர் ஓடையோரத்தில் மரச் சோலைகளுக்கிடையில் இருந்த பாழுங் கோயில் ஒன்றுக்கருகில் அவன் தன்னந்தனியனய்ப் போய்க் கொண்டிருந்தான். அப்போது மெல்லிய குரலில் மானுட சத்தம் ஒன்று கேட்டது. திரும்பிப் பார்த்தான்; சுற்றுமுற்றும் பார்த்தான். யாரும் தென்படவில்லை. மேலும் நடக்க எத்தனித்தபோது, அதே குரல் இன்னொரு தடவை ஒலித்தது. தையற்காரன் சத்தம் வந்த இடத்தை நோக்கிப் போனன். அந்தோ! ஒரு செடியின்பின் கட்டத் துணியின்றிக் கன்னங்கரேலென்று மனிதன் ஒருவன் நடுங்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். முதலில் சிறிது அஞ்சிய தையற்காரன், "நீ யார்?" என்று வினவினன். பதில் ஒன்றும் வரவில்லை. தன்பாட்டில் வழியே போய்விடலாமா என்று எண்ணினன். அடுத்த கணத்தில் கொஞ்சம் தயை வந்தது. "உனக்கு என்ன வேண்டும்?" என்ருன். "என்

கதியைப் பார்த்து நீ விரும்பியதைச் செய்" என்று பதில் வந்தது. தான் அணிந்திருந்த மேல் வேஷ்டியைத் தையற்காரன் அக்கருப்பனுக்குக் கொடுத்துவிட்டான். பின்பு இரண்டடி அப்பால் சென்றுவிட்டு, "என்னோடு வருகின்றாயா?" என்று திரும்பக் கேட்டான். வேற்றானும் அதற்கிசைந்து உடன் சென்றான். தையற்காரனுக்கு வழிநெடுகத் தன் வீட்டின் நிலைமைபற்றியே எண்ணம்.

ஆவலுடன் எதிர்பார்த்து நின்ற மனையாள், "எங்கே அரிசி?" என்றாள். "இவ்வாரம் அரிசி வாங்க இயலவில்லை. மற்றும் விருந்து ஒன்று......" கணவன் சொல்லி முடிப்பதற்குள் கோபாவேசம் பூண்ட இல்லாள் ஆடினாள்; பாடினாள்; சட்டியொன்றை எடுத்து அவனெதிரே வீசினாள்; பிறகு வீட்டுக்குள் போய்விட்டாள். இருவரும் மௌனமுற்று உட்கார்ந்திருந்தனர். மற்றுமொரு முறை மனையாள் வெளியே வந்து, உணவுகொள்ளும் பொருட்டுத் தன்னைக் கொண்டவனைக் கூப்பிட்டாள். தையற்காரனோ தன்னோடு வந்தவனைத் திரும்பிப் பார்த்தான். நிலையைக் குறிப்பாலறிந்த இல்லக்கிழத்தி, "எழுந்துபோ, வந்த வழியே" என்று ஏவினாள். முகம் வாடிய வேற்றானும் அப்படியே செய்ய ஆரம்பித்தான்.

சற்று நேரத்துக்குள் மனையாளுக்கு மனம் மாறிவிட்டது. "ஐயோ, பாவம்! அவனும் பிழைத்துப் போகட்டும்; அப்பா மகனே, வா. எங்களுக்கு உள்ள கஞ்சியில் உனக்கும் ஒரு வாய் தருகிறேன்" என்று பரிந்து அழைத்தாள். வழியே சென்ற வேற்றான் திரும்பிப்பார்த்தான். அழைத்த அம்மையின் முகவிலாசத்தை உற்று நோக்கினான். உள்ளம் பூரித்துப் புன்னகை பூத்தான்; வீட்டினுள்ளே வந்தான்; அவன் வார்த்த கஞ்சியைக் களிப்புடன் பருகினான். புன்சிரிப்புப் பூண்டபோது அவனுடைய மேனியும் கொஞ்சம் ஒளிபெற்றது.

தையற்காரனுக்கு வேலைக்குத் துணைக்கு ஒருவனும் இல்லாத நெடுங்குறை ஒன்று இருந்தது. அதை அவன் இல்லாளிடம் வெளியிட்டான். பின்பு இருவரும் கூடி வேற்றுனை வேண்டினார்கள். அவனும் அவர்களுக்குப் பிள்ளைபோன்று இருந்து, இட்டவேலையைச் செய்ய இசைந்தான். இப்போது குடும்பத்தில் மூவர். அவர்கள் கஷ்டப்பட்டு வேலை செய்வார்கள். எனினும் காலக்ஷேபம் அவ்வளவு திருப்திகரமாக நடைபெறவில்லை. வறுமையில் தட்டுப்படாது காலங்கழிந்தது எனலாம். இடையிடையே வீட்டில் சச்சரவு வந்துவிடும். ஆனால் புதிதாக வந்தவன் மட்டும் சண்டையில் கலந்து கொள்ளவில்லை. அவனுண்டு, அவனுடைய வேலையுண்டு. சாதாரணமாக மக்களிடத்து நாம் காணும் ஓர் இயல்புக்குப் புறம்பானவனாய் அவன் இருந்தான். சிரிப்பதுமில்லை; துயரப்படுவதுமில்லை. தையற்காரனும் அவனுடைய மனையாளும் இதைக் கவனித்தார்கள். எனினும், இதைப்பற்றிப் பேசவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அம்மனிதன் இவர்கள் வீட்டில் வேலைக்கு வந்து சேர்ந்து வருஷங்கள் ஆறு ஆய்விட்டன. இதற்குள்ளாக அவன் கைதேர்ந்த தையற்காரனாய் விட்டான்.

ஒருநாள் இருவரும் வீட்டில் தையல் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். அப்போது சீமாட்டி ஒருத்தி வண்டியில் வந்து இறங்குகிறாள். இரண்டு பெண் குழந்தைகளைப் பிரியமாக வண்டியினின்று இறக்கி அழைத்து வருகிறாள். மூத்த குழந்தைக்கு வயது ஆறும் இளையதற்கு நான்கும் இருக்கும். இவர்கள் கடைக்குள் வருவதைப் பார்த்த தையற்காரன் மனைவியும் உள்ளேயிருந்து அங்கு வந்து நிற்கிறாள். விலையுயர்ந்த துணிகளைக் கொண்டுவந்த சீமாட்டி, அக்குழந்தைகளுக்குப் பாவாடைகளும் சட்டைகளும் தைக்க

வேண்டுமென்கிறுள். மூத்த குழந்தையினிடத்து அதிக அன்பு பாராட்டுகிறுள். ஏனென்றுல் அதன் கையொன்று ஊன மடைந்திருக்கிறது; நன்கு மடக்கமுடியாது. அங்கியை அதற் கேற்றபடி தைக்கவேண்டும். ஆயினும் அங்கியின் அழகும் அமைப்பும் கெட்டுவிடலாகாது. இத்தனை நிபந்தனைகளுக்கும் உட்பட்டுத் துணியையும் கெடுத்துவிடாது தைக்க வல்லவன் தனது வேலையாள் ஒருவனே என்றெண்ணிய தையற்காரன், அப்பொறுப்பை அவனிடம் ஒப்புவிக்கிறுன். இது பரியந்தம் தலைகுனிந்தவனுகத் தன் வேலையைப் பார்த்துவந்த அம்மனிதன், இப்பொழுது நிமிர்ந்து பார்க்கிறுன். ஆறு வயதுடைய பெண்ணின்மீது அவன் கவனம் அதிகம் செல்லுகிறது. அவளை உற்றுப் பார்த்தபின், இப்போது இரண்டாந் தடவை புன்சிரிப்புச் சிரிக்கிறுன்! இந்த ஆறு வருஷ காலமாகச் சிரிக்காதவன் இப்பொழுது சிரிப்பதைத் தையற்காரனும் அவனுடைய மனைவியும் கவனிக்கிறுர்கள். அது மட்டுமல்ல; இரண்டாந்தடவை புன்னகை பூத்தவுடனே அவனது மேனி இன்னும் கொஞ்சம் பொலிவு பெற்றுவிடுகிறது. அதிசயம் அத்துடன் நின்றுவிடுகிறது. அதைப்பற்றிப் பேசுதற்கும் ஒன்றுமில்லை. சீமாட்டியின் குழந்தைகளுக்குத் தேவையான ஆடைகளை அவன் தைக்கிறுன். பிறகு பழையபடி அமைதியாகத் தொழில் நடந்துகொண்டிருக்கிறது.

இன்னும் ஓர் ஆறு ஆண்டுகள் கழிவனவாயின. அதற்கிடையில் புதுமை யாதும் நிகழவில்லை. உதவியாளாக வேலை செய்தவன் வழக்கம்போல் தனக்கிட்ட பணியைக் குறைவறச் செய்து வந்தான். பொதுவாகப் பாமரர்களே அக்கடையில் உடை தைக்கப்போவது வழக்கம். சீரிய அந்தஸ்தில் இருப்பவர்களும் பணக்காரர்களும் அங்குப் போவது அரிது. வழக்கத்துக்கு மாறுக ஒருநாள் ஒரு பெரிய குதிரை வண்டி

அக்கடையண்டை வந்து நிற்கிறது. வண்டியினின்று கீழே குதித்திறங்கிய வேலையாட்களின் ஆடம்பரத்தைப் பார்த்தவுடன் தையற்காரன் திகில் அடைகிறான். எஜமானன் தாமே வண்டியினின்று இறங்கிக் கடைக்கு வருகிறார். ஏவலாள் ஒருவன் கையில் பெரிய மூட்டையொன்றை எடுத்து வருகிறான். அப்பெரியாரை மரியாதையுடன் கவனிக்கும்படி தையற்காரன் தனது உதவியாளை ஏவுகிறான். பேசாது, மனக்கோணலின்றி வேலை செய்யும் அப்பேர்வழியும் தனக்கிட்ட வேலையைப் பணிவுடன் செய்கிறான். பிரபு மூட்டையை அவிழ்த்து, விலையுயர்ந்த பட்டு ஒன்றை எடுத்து விரித்துக் காட்டுகிறார். தாம் அதை ஒரு தூரதேசத்திலிருந்து வாங்கி வந்ததாகவும், அதைக்கொண்டு தமக்கு அழகியதோர் அங்கி தைக்க வேண்டுமென்றும் பணியிடுகிறார். முறையாக அவருடைய உடலின் அளவு எடுத்துக்கொள்ளப்படுகிறது. மூன்றே நாளில் அங்கி ஆயத்தமாக வேண்டும் என்றும் ஆக்ஞாபிக்கப் படுகிறது. தைப்பது அவசரமாகவெனினும் தைப்பு பத்து வருஷத்துக்குக் கேடுறாதிருக்க வேண்டும் என்கிறார் பிரபு. இதைக் கேட்டதும் அம்மனிதன் புன்சிரிப்புப் பூணுகிறான். அதன் பயனாக அவனுடைய உடல் இன்னும் அதிகமாக ஒளி வீசுகிறது. இதை மூத்த தையற்காரன் கூர்ந்து கவனிக்கிறான்; ஆனால் பேச்சு ஒன்றும் எழவில்லை. பிரபுவும் தமது கட்டளைப்படி காரியம் ஆகவேண்டுமென்று கடைசியாக ஒரு தடவை சொல்லிவிட்டுப் போய்விடுகிறார்.

இரவும் பகலும் உழைத்தால்தான் அவ்வேலை மூன்று நாளில் முடியக்கூடியது. ஆயினும், முதல்நாளில் அவன் அத்துணியைத் தொடவில்லை. இரண்டாம் நாள் முற்பகலும் அங்ஙனமே கழிந்தது. சென்ற பன்னிரண்டு வருஷங்களாக அவன் அவ்வாறு நடந்துகொண்டதை மூத்த தையற்காரன்

கவனித்ததில்லை. ஆதலால், அவனுக்கு இது வழக்கில் இல்லாத ஒரு வியப்பு. பின்பு பிற்பகலில் அவன் என்ன செய்தான்? பிரபு விரும்பியபடி அங்கி தைப்பதற்குப் பதிலாக பட்டுத் துணியை இரண்டு மூன்று துண்டுகளாகக் கிழித்து, தடித்து நீண்ட தலையணை ஒன்றுக்கு உறைபோன்ற பையொன்று தைத்தான். வீட்டுக்காரனே தனக்கு வில்லங்கம் வந்துவிட்டதென்று விதிர் விதிர்த்தான்.

இதற்குள் குதிரையில் ஓர் ஆள் விரைந்து ஓடிவந்தான். "எஜமானன் மாரடைப்பால் மாண்டு போனார்! அங்கி தைக்கவேண்டாம். அதே பட்டுத் துணியைக்கொண்டு அவர் சவத்துக்கு உறையொன்று தைக்கவேண்டும்" என்று மூச்செறிந்துகொண்டு துயருடன் உளறினான். இளைய தையற்காரனும், "இதோ உறை ஆய்விட்டது" என்று அமைதியுடன் இயம்பிக்கொண்டு, அதை எதிரில் எடுத்துப் போட்டான். வந்த ஆள் அதைச் சுருட்டியெடுத்துக்கொண்டு குதிரையேறிக் கடிதிற் சென்று மறைந்தான்.

இளைய தையற்காரனும் இப்போது அறவே உருமாறி விட்டான்! உருக்கிய பொன் போன்று அவன் உடல் ஒளி வீசுகின்றது. பாதம் பூமியில் படிவதில்லை. அவ்விடத்தை விட்டுப் புறப்பட எத்தனித்தான். அதற்குள் அவனுக்குத் தந்தையும் தாயும் போன்றிருந்த தையற்காரனும் அவனுடைய மனையாளும் நூதன வடிவெடுத்த அம்மனிதனது இரு கரங்களையும் இறுகப் பற்றிக்கொண்டனர். பின்பு அவர்கள் விண்ணப்பிப்பாராயினர்:— "நீ கந்தர்வனோ, தேவனோ, மற்று யாரோ நாங்கள் அறியோம். நீ பன்னீராண்டு எங்களோடு இருந்தாய். ஆனால் முன்றே மூன்று தடவை நீ புன் முறுவல் பூத்தாய். ஒவ்வொரு தடவையும் உன் தேஜஸ் அதிகரித்தது. உன் சிரிப்புக்கு அடிப்படையாயுள்ள ரகசியம்

யாதென்று எங்களுக்கு விளங்கவில்லை. உண்மையை எங்களுக்கு எடுத்தோத வேண்டும்."

"நான் யமதூதன். தேவ ரகசியம் தெரியாமையால் இத்தனை நாள் உங்களோடு இருக்க வேண்டியதாயிற்று. ஒரு மாதின் துயரத்துக்கு இரங்கி அவளுடைய உயிரைக் கொண்டு போகாது விட்டுவிட்டேன். ஆதலால் சாபமேற் பட்டு, நான் இங்கு வந்து சேர்ந்தேன். அம்மா, நீ எனக்கு உணவு அளிக்க மறுத்தபோது, உன் முகத்தில் மூதேவி குடியிருப்பதைக் கண்டேன். பிறகு உனக்கு மனமிரங்கிய வுடனே அக்காளுக்குப் பதிலாக லக்ஷ்மிதேவி உன் முக விலாசத்தில் மிளிர்ந்தாள். மூதேவியை விலக்கி ஸ்ரீதேவியைப் பெறுவது இவ்வளவு சுலபமானதா என்று என் மனதில் பட்டது. அதுவே என் முதற் சிரிப்புக்குக் காரணம். நான் அறிந்துகொண்ட முதலாவது தேவ ரகசியமும் அதுவே. ஊனமடைந்த கையையுடைய பெண் குழந்தையொன்றைச் சீமாட்டி அழைத்து வந்தாள். ஆறு வருஷத்துக்கு முன்பு எந்தத் தாயின் பரிதாபத்துக்கு இணங்கி நான் உயிரைக் கொண்டு போகாது விட்டு விட்டேனோ, அதே தாயின் குழந்தை அது. சாகும்போது தன்னையறியாது அவள் காலால் உதைத்தமையால் அக்குழந்தைக்குக் கையொடிந்து ஊனமாயிற்று. ஆனால், அதைப் பராமரிக்க அவளை விடப் பன்மடங்கு செல்வம் வாய்க்கப்பெற்ற ஒரு சீமாட்டி வந்து சேர்ந்தாள். பாவாடை தைக்க வந்த அக்குழந்தையைப் பார்த்ததும் எனக்கு அடையாளம் தெரிந்து விட்டது. அத் துடன் தேவ ரகசியம் ஒன்று விளங்கிற்று. பிறந்தது முதல் சாகும் பரியந்தம் ஜீவர்களைக் காப்பாற்றுதற்கு மக்களிலும் மேலான பொருள் ஒன்று இருக்கிறது. அதன் ஆணையை மீறி நடக்க யாருக்கும் இயலாது. இவ்வுண்மையைத்

தெரிந்துகொண்டதும் நான் இரண்டாம் முறை சிரித்தேன். பத்து வருஷத்துக்குப் பட்டாலான அங்கியை வைத்து அனுபவிக்க விரும்பிய பணக்காரனது தோளின்மீது மரணம் வந்து உட்கார்ந்துகொண்டிருப்பதைக் கண்டேன். அடுத்தநாள் உயிர் துறக்கப் போவதை அறியாது மனிதன் பத்து வருஷத்துக்குத் திட்டம் போடுகிறானே என்று வியந்தேன். மனிதர்களுக்குத் தெரியாவிடினும், இந்த ரகசியம் தேவர்களுக்குத் தெரியுமென்றறிந்து நான் மூன்றும் முறை முறுவல் பூண்டேன். பட்டு பிணத்துக்காவது பயன்படட்டுமென்று உறையாகத் தைத்துவிட்டேன். நான் சிரித்தபோதெல்லாம் என் உடல் பிரகாசம் அடைவதை நீங்கள் பார்த்தீர்கள். தேவ ரகசியத்தைத் தெரிந்துகொள்ளுமளவு பேரானந்தம் உண்டாகிறது. பேரானந்தம் உதிப்பதற்கு ஏற்ப உடலில் பிரகாசம் வருகிறது. பிரகாசமான சரீரத்தை உடையவரே தேவர். முயன்றால் மக்களும் தேவர் ஆகலாம்."

இவ்வாறு சொல்லிக்கொண்டே யமதூதன் அவ்விடத்தைவிட்டு மறைந்து, யதாஸ்தானம் போய்ச்சேர்ந்தான்.

---

## ஊட்டி வளர்த்த பிள்ளை உருப்படாது

சில ஆண்டுகளுக்கு முன்பு கூர்ஜர நாட்டில் மோக்ஷ தானந்தர் என்ற முனிவர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவர் பரிவ்ராஜக பரமஹம்ஸ பரம்பரையைச் சார்ந்தவர். அந்த மரபினது கொள்கைக்கு ஏற்ப, அப்பெரியார் குறிப்பிட்ட ஓரிடத்தில் தொடர்ந்து அதிகநாள் தங்கார். எப்போதும் சஞ்சாரம் செய்துகொண்டிருக்கும் சந்நியாசி அவர். உட லானது உலகில் உலாவுகையில் அவரது தூய உள்ளம் இடையறாது இறைவனது சன்னிதி சார்ந்திருக்கும். ஆதலால் தாம் எந்த ஊரில் இருக்கிறார் என்பதும், யார் யாரைச் சந்திக்க நேரிடுகிறது என்பதும் அவரது கருத்தில் பதியா. காய்ந்து வீழ்ந்த சருகு, காற்றடிக்கும் பக்கம் உருண்டோடு வது போன்று அந்த ஜீவன்முக்தரது சரீரம் பிராரப்த கர் மத்தின் வழியே சென்றது. அவ்வாறு செல்லுமிடமெங்கும் அவர் உலகுக்கு அருள்விருந்து அளித்துவந்தார் என்பதைத் தாமே அறியார். அவர் ஆத்ம சாக்ஷாத்காரத்துக்கு ஓர் எடுத்துக்காட்டாக இலங்கியதுமல்லாது, விரிந்த மலர் மணம் வீசுவது போன்று தம்மை வந்தணுகினவர்க்கு ஞான மும், பக்தியும், தூய்மையும் வேண்டியவாறு வழங்கலானார். அவர் பேசுவதும் பேசாதிருப்பதும் தம்மை நெருங்கிய வரது நேர்மையைப் பொறுத்தனவாம்.

அவரது போக்கு அப்படியிருக்க, உலகப்பற்று ஒழிந்த வனும் நுண்ணறிவாளனுமாகிய இளைஞன் ஒருவன் ஒரு சந்தர்ப்பத்தில் அவரைச் சந்திக்கும்படி நேர்கிறது; ஊசி காந்தத்தினைக் கண்டு அணுகுவது போன்று யுவனது உள் ளம் யோகியர் முன்னிலையில் கொள்ளை போகிறது; தன்னை யறியாது தலை வணங்குகிறது; உள்ளக் கவர்ச்சிக்கு ஒருப்

பட்ட நாவு பேசுகிறது. — "அண்ணலே, என்னை ஆட்கொண்டு, ஆத்ம ஞானம் ஊட்டியருளும்." வாலிபனது முகத்தை முனிவர் உற்று நோக்குகிறார். அவரது அருள் நோக்கம் அவனுக்கு ஆனந்தமூட்டுகிறது; உடலும் சிலிர்க்கிறது "உன்னை நீயே அறியவேண்டும். ஆத்மீக விஷயத்தில் ஊட்டி வளர்த்த பிள்ளை உருப்படுமா?" என்று ஞானியார் வினவுகிறார். என்ன பதில் விடுப்பதென்று பிள்ளையாண்டானுக்குப் புலப்படவில்லை. அவர் செல்லும் இடமெங்கும் இவன் சும்மா அவரைப் பின்பற்றுகிறான். இப்படி நாட்கள் பல கழிகின்றன. ஊக்கமுடைய இளைஞனது ஆத்ம வளர்ச்சிக்கு ஜீவன் முக்தரது சன்னிதான விசேஷம் பெரிதும் பயன்படுகிறது. ஆதலால் அவன் அதிவேகமாகப் பக்குவமடைந்து வருகிறான்.

ஓரிரவு முனிவரும், சாயைபோன்று அவரைப் பின்பற்றுகிற சிஷ்யனும் சத்திரம் ஒன்றில் சயனித்திருக்கின்றனர். பிரளய காலம் போன்று எல்லாம் ஒரே அமைதியாயிருக்கிறது. உலகனைத்தும் ஓய்ந்திருக்கும் வேளையில், யோகிகளும் அயோக்கியரும் தத்தம் தொழில் புரிகின்றனர் என்று சொல்லப்படுகிறது. மோக்ஷதானந்த சுவாமிகள் உறங்குவது மிகக் குறைவு. அவரைப் பின்பற்றுகிற வாலிபன் ஆத்மசாதனத்தின் பொருட்டு நள்ளிரவில் விழித்தெழுந்திருக்கிறான். சிறிதுநேரத்துக்குள் அண்டை வீட்டில் வசிக்கின்ற ஒரு திருடனுக்கும் அவனது மகனுக்கும் இடையே சம்பாஷணை ஒன்று நடைபெறுகிறது.

**மகன்:**—அப்பா, எனக்கும் வயது முதிர்ந்துவிட்டது. ஆனால் நீ இன்னும் கள்ளத் தொழிலை எனக்குக் கற்பிக்கவில்லையே?

**தகப்பன்:**— உனக்கு அக்கறையிருந்தால் நீயே கற்றுக் கொள்வாய்.

**மகன்:**—எதிர் வீட்டில் இராமனுக்குக் குலத்தொழிலாகிய குடித்தனத்தை எவ்வளவு பாடுபட்டுச் சொல்லிக் கொடுக்கிறார்கள்!

**தகப்பன்:**— இராமன் பிறந்ததும் அவன் தகப்பன் காலமாய் விட்டான். தாய் விதவை. பிரியத்தால் பையனைக் கெடுத்துவிடுவாள். தவிர, ஊட்டி வளர்க்கிற பிள்ளை உபயோகப்படான்.

இம்மொழி சிஷ்யனுடைய கருத்தில் ஆழ்ந்து பதிகிறது. அன்று ஆத்ம சாதன சம்பந்தமாக அவர் இதையே பகர்ந்தார். இன்று, கேவலம் திருட்டுத் தொழிலுக்கும் இதே உபதேசம் வருகிறது!

எனினும், ஒரு தடவையாவது அப்பனோடு சேர்ந்து களவாடவேண்டுமென்று விரும்பிய மகனை அப்போதே அவன் அழைத்துக்கொண்டு புறப்படுகிறான். ஒரே நாளில் சோர வித்தையின் ரகசியத்தைப் பிள்ளைக்குப் புகட்டிவிடுவதாகவும் பிதா உறுதி கூறுகிறான். மேலும் என்ன நிகழப் போகிறது என்பதைத் தெரிந்துகொள்ள விரும்பிய இளந் துறவி ஆவலுடன் மோக்ஷதானந்த சுவாமிகளைப் பார்க்கிறான். அப்பெரியாரும் கள்வர் இருவரையும் பின்தொடரும்படி யுவனுக்கு அனுமதி தருகிறார்.

கோடை வெக்கையைத் தாங்கமுடியாது ஒரு வீட்டார் அனைவரும் திண்ணையில் படுத்துறங்குகின்றனர். குறட்டைச் சப்தம் பிறிடுகிறது. கைதேர்ந்த திருடன் அதிவிரைவில் வீட்டின் பின்பக்கம் கன்னமிட்டு,மகனை அழைத்துக்கொண்டு உள்ளே நுழைகிறான். அங்கிருக்கும் பண்டங்களையெல்லாம்

சாவதானமாய் விளக்கைப் பிடித்துக்கொண்டு பரிசோதிக் கிறான். பூட்டிட்ட பெரிய பெட்டி ஒன்று இருக்கிறது. விலை யுயர்ந்த பொருள்களனைத்தும் அதனுள் இருக்கவேண்டு மென்று ஊகிக்கிறான். அதன்மீது யாரேனும் ஒருவர் படுத் திருப்பது வழக்கம். ஆனால் வேனிற்புழுக்கம் எல்லாரையும் வெளியே ஓட்டிவிட்டது. குழந்தை ஒன்றுமட்டும் தொட்டி யில் தூங்குகிறது.

கள்ளன் கையில் சிறிதும் பெரிதுமான சில சாவிகள் இருக்கின்றன. சாதுர்யமாகச் சந்தடியின்றி அவன் பெட்டி யைத் திறந்துவிடுகிறான். அதனுள்ளே போகும்படி அவன் மகனை ஏவுகிறான். பையனும் முதற்பிரயத்தனம் மோசமாய்ப் போய்விடலாகாதென்று எண்ணிக்கொண்டு உற்சாகத் துடன் உள்ளே பாய்ந்து, பொருள் தேடுகிறான். ஆனால் தனக்குத் தொழில் கற்பிக்க அழைத்துவந்த தகப்பனே மோசம் பண்ணுவானென்று அவன் கனவிலும் கருதவில்லை. பையனைப் பெட்டிக்குள் போட்டுப் பூட்டிவிட்டு, கூப்பாடு போட்டு வீட்டாருக்குக் குழப்பமூட்டி எழுப்பிவிட்டு, தான் செய்த பொத்தலின் வழியாக வெளியே ஓட்டம் பிடித்து விடுகிறான்.

குழந்தைக்கு என்ன நேரிட்டதோவென்று அலறி அடித்துப் புடைத்துக்கொண்டு அனைவரும் உள்ளே ஓடிவரு கின்றனர். ஆனால் ஆபத்து ஒன்றும் வந்துவிடவில்லை. சிசு நிம்மதியாக நித்திரை பண்ணுகிறது. பண்டங்கள் அனைத் தும் வைத்தபடி இருக்கின்றன. சுவரில் துளைத்திருக்கும் துவாரம் ஒன்றுமட்டும் நூதனமாகத் தென்படுகின்றது. ஒரு வேளை திருட வந்தவன் பைத்தியக்காரனயிருக்கலாம்; அல் லது மருண்டு ஓடியிருக்கலாம் என்று சமாதானம் செய்து கொண்டு மறுபடியும் அனைவரும் நித்திரை போகின்றனர்.

ஆனால் இப்போது தடித்த ஒருவன் பெட்டியின்மீது படுத்துக் கொள்கிறான்.

உள்ளே அடைபட்டிருக்கும் பையன் நல்ல காற்றுக் காகத் திணறுகிறான். இன்னும் ஒரு நாழிகை உள்ளே இருந் தால், உயிர் துறக்க வேண்டியதுதான். அதைவிட ஓட முயன்று அவர்கள் கையில் பிடிபடுவது மேல் என்று அவன் தீர்மானிக்கிறான். பெட்டியை ஒரு மூலையில் சுரண்டுகிறான். எலி உபத்திரவம் பண்ணுகிறதென்று எண்ணி, படுத்திருப் பவன் காலால் தட்டுகிறான். பையன் இன்னொரு மூலையில் சுரண்டுகிறான். திரும்பத் திரும்பச் சுரண்டுகிறான். எலியை ஒழித்தாலொழியத் தூங்குவது சாத்தியமன்று என்று எண்ணி, தடித்தவன் பதைபதைப்புடன் திறவுகோல் போட் டுப் பெட்டியைத் திறக்கிறான். இப்போது வாயுவேகம் மனோ வேகமென வேலைசெய்தால் மட்டுந்தான் தப்பித்துக்கொள்ள முடியுமென்று கருதிய கள்ளப்பையன், உள்ளே எச்சரிக்கை யாகக் காத்திருக்கிறான்; பெட்டியின் மூடி மேலே கிளம்பி யதோ இல்லையோ, அவன் திடீரென்று வெளியே பாய்கிறான்; பெட்டியைத் திறந்தவன் முகத்தின் மீது ஒரு மோது மோது கிறான்; அவனும் இது பேயோ பிசாசோவென்று மருண்டு கோவென்று கதறிப் பின்வாங்குகிறான். இதற்குள்ளாகப் பையனும் சாதுர்யமாக வீட்டுக்கு வெளியே வந்து ஓட ஆரம் பிக்கிறான்; ஆனால் இன்னும் தப்பினபாடில்லை. ஒரு சிறு கூட்டம் திரண்டு அவனைத் துரத்திக்கொண்டு வருகிறது. இன்னும் சற்று நேரத்துக்குள் அகப்பட்டு விடுவான் போலி ருக்கிறது. துரத்துபவர்களும் அவனை நெருங்கிவிட்டார்கள். வழியோரத்தில் கிணறு ஒன்று இருக்கிறது. அதனுள் "தும்—ம்" என்று ஆள் குதிக்கும் சத்தம் கேட்கிறது. துரத்தி வந்தவர்கள் கிணற்றைச் சுற்றிலும் சூழ்கிறார்கள்.

மேலும் மனிதர்கள் வந்து கூடி நின்றனர். கிணற்றினுள் கள்ளன் அகப்பட்டு விட்டான் என்று ஒரே இரைச்சல்.

இந்த வரலாறு இவ்வாறு இருக்க, பாலயோகி நேர் வழியில் மெதுவாகக் குருவிடம் வந்து உட்கார்கிறான். அண்டை வீட்டுத் தாழ்வாரத்தில் திருடனும் மகனுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு ஆவலுடன் அமர்ந்திருக்கிறான். பிள்ளையோ ஓடோடி வந்து முடிச்சு ஒன்றை அவனது முன்னிலையில் வைத்துவிட்டுப் பெருமூச்சு வாங்குகிறான்.

"எப்படியடா தப்பித்து வந்தாய்?" என்கிறான் பிதா, வியப்புடன்.

"முதலில் முடிச்சை அவிழ்த்துப் பார்" என்று பதில் வருகிறது. அதில் கொஞ்சம் நகையும் பணமும் இருக்கின்றன.

பிறகு பையன், "நல்ல வேலை செய்தாய், அப்பா! நான் தப்பித்தது தெய்வச் செயல்" என்று துவக்கி, விருத்தாந்தம் முழுவதையும் மொழிகிறான். பெட்டியினின்று வெறுங் கையுடன் கிளம்பலாகாதென்று அம்முடிச்சை எடுத்து மடியில் கட்டிக்கொண்டதாகவும், கிணற்றினுள் பெரிய கல் ஒன்றைத் தூக்கிப் போட்டுவிட்டுத் தான் ஒரு மரத்துக்குப் பின் மறைந்திருந்து, மாற்றுவழி ஒன்றில் ஓடிவந்ததாகவும் தெரிவிக்கிறான்.

"பிள்ளாய், நீ எப்படியும் பிழைத்துக்கொள்வாய். தவிர, நீ செய்ததெல்லாம் பிறர் சொல்லக்கேட்டு வருவதா?" என்கின்றான், கைதேர்ந்த கள்ளன்.

பாலயோகியின் அறிவு இப்போது தீட்சண்யமடைகிறது. விவேகம் வெளியுலகிலிருந்து வருவதல்ல என்பதை உணர்கிறான் அவன். இரண்டு மரங்கள் ஒன்றையொன்று

ஒட்டியிருந்தால் ஓங்கி வளரா. அம்முறையில் யோகி ஒருவனுக்கு மார்க்கம் இன்னதென்று மனம் தெளிந்த பின்பு அவன் தனித்திருக்க வேண்டும், விழித்திருக்க வேண்டும். பரத்தினைச் சாரப் பசித்திருக்கவேண்டும் என்று இளைஞன் ஓர்கிறான். விடை பெறுதற்கு அவன் மோக்ஷதானந்த சுவாமிகள் முன்னிலையில் தலை வணங்குகிறான். "நீ நாடும் நேர்மை உன்னிடத்தே உளது" என்கின்றார் அவர். அருள்நோக்கத்துடன் முமுட்சுவுக்கு அவர் ஆசி கூறியனுப்புகிறார்.

நிழலில் வளரும் செடிபோன்று உலகில் செல்லமாக வளர்கின்ற பிள்ளைகளெல்லாம் சீர் அழிந்து போகின்றனர். ஆனால் படாத பாடுபட்டுச் சுயப்பிரயத்தனத்தால் வளரும் மக்கள் யாண்டும் மேன்மையுறுகின்றனர். यो यच्छ्रद्धः स एव सः 'ஒருவனுடைய சிரத்தைக்கு ஏற்ற மனிதனாக அவன் ஆய்விடுகின்றான்' என்று கீதையில் பகவான் பகர்கின்றார். சிரத்தையில்லார்க்கு வேறு எது இருந்தும் பயன்படாது. ஆனால் சிரத்தையுடையார்க்கு இகபரம் இரண்டிலும் எல்லாம் உண்டு.

---

# செத்தால் பிழைக்கலாம்

இந்தியாவின் வடமேற்குப் பாகத்திலிருக்கும் பஞ்சாப் என்பது பஞ்ச நதிகள் பாயும் நாடு. அவ்வைந்து நதிகளுக்கும் சிந்து என்பது பொதுப் பெயர். ஆண்டு முழுதும் பெருக்கெடுத்து வேகமாய் ஓடும் அவ்வாற்றங்கரையோரத்தில் ஜாம்புரம் என்னும் ஒரு பட்டணம் உண்டு. சதாகாலமும் தேசசஞ்சாரம் செய்யும் முனிவர் ஒருவர் பல வருஷங்களுக்கு முன்பு அவ்வூர் வந்து சேர்ந்தார். அவருடைய விருத்தாந்தத்தைப்பற்றி யாருக்கும் ஒன்றும் தெரியாது. விரும்பியவாறு வெட்டவெளியில் பறந்தோடும் பறவை போன்று அவர் பல இடங்களுக்குப் போவார். செல்லுமிடமெங்கும் அவர் மாந்தர்க்கு அருள்விருந்து அளித்து வந்தார் என்பது மட்டும் வெளிப்படை. இறைவனைப் போன்று இறைவனுடைய அடியார்களும் பகட்டொன்றுமின்றி அமைதியாக அரும்பணியாற்றி வருவர் என்பதற்கு இம்முனிவரே சான்றாக இலங்கினார். எங்கிருந்தோ ஜாம்புரம் வந்து சேர்ந்த அவர் ஆற்றோரம் இருந்த ஒரு கோவிலில் வாசம் செய்து வந்தார். வட இந்தியாவில் ஒவ்வொரு கோவிலிலும் சாதுக்கள் வசிப்பதற்குத் தனியிடம் அமைக்கப்பட்டிருக்கும். யாருடைய அனுமதியையும் எதிர்பாராது அவர்கள் அங்குச் சென்று வசிக்கலாம்.

ஜாம்புரத்துக்கு வந்த முனிவர், தேக சம்ரட்சணையின் பொருட்டு யாரிடத்திலும் எதையும் கேட்பதில்லை. உணவு வலியக் கிடைத்தால் ஒரு நாள் ஒரு வேளை மட்டும் அவர் புசிப்பார். வலிவுடைய அவர் திருமேனி குளிர், வெப்பம், மழை முதலியவைகளுக்கு உறைத்தது. இரண்டு கோவணமும் ஒரு கமண்டலமும் அவருடைய இகலோகப் பொருள்களாம்.

அவருடைய ஆசியை நாடி வந்தவர் கூட்டம் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டு வந்தது. சர்க்கரை இருக்குமிடத்துக்கு எறும்புகள் தாமாகவே வருவது போன்று, மேலோரிடத்து முமுட்சுக்கள் வருவது இயல்பன்றோ !

வெறும் வாசாஞானிகள் பேசுவது போன்று அம்முனிவர் ஒரு கேள்விக்கு ஒரே விதமான விடையளிப்பதில்லை. யாருக்கு எது தேவையோ, அது அவருடைய உள்ளத்தினின்று வெளியாகும், ஒரு ஞானக் களஞ்சியத்தை அணுகியதாகப் பண்டிதன் ஒருவன் அப்பெரியார் முன்னிலையில் உணர்வான். பாமரனுக்கு அவர் மற்றொரு பாமரன் ஆய்விடுவார். வீண்பேச்சுப் பேசுபவருக்குப் புன்னகை பூத்த மோன நிலையே அம்முனிவர் விடுக்கும் பதிலாகும். பாலரோடு அவர் கூடி விளையாடுவது பார்ப்பதற்கரிய காட்சியாகும். வயதில் பெரியவர் எனினும், அவரையும் ஒரு பச்சைக் குழந்தையென்றே சொல்லவேண்டும். சுருங்கச் சொல்லின், மாசு படியாத ஒரு நிலைக்கண்ணாடியோடு அவருடைய மனதை ஒப்பிடலாம். கண்ணாடியின் முன்னிலையில் ஒன்றும் தோன்றாதபோது அது தன்மயமாயிருக்கிறது. பின்பு எதிரில் வருபவர் முகம் எப்படியோ, அப்படிப்பட்ட பிம்பம் அதில் பிரதிபலிக்கிறது. எத்தனை விதமான பிம்பங்களைக் காட்டிய போதிலும் அதனால் கண்ணாடிக்குக் கேடொன்றும் உண்டாவதில்லை. அம்மகானுடைய மேம்பட்ட மனதும் அப்படியிருந்தது. ஆனால் கண்ணாடியிடம் வருபவனுக்கு ஆதாயமொன்றுமில்லை; முனிவரிடம் வந்தவர் எல்லாரும் மனத்தகத்துள்ள மாசை நீக்க வல்லவராயினர். அவரை அண்டியவருள் அவருடைய அருளுக்குப் பாத்திரமாகாதவர் எவருமில்லை.

ஜாம்புரத்தில் ஒரு ஜமீன்தார் வீடு இருந்தது. பஞ்ச வர்ணக்கிளியொன்று அங்கு ஒரு கூட்டில் வளர்க்கப்பட்டு வந்தது. கூட்டுக்கு வெள்ளிக்கம்பி போட்டு அலங்காரங்கள் பல செய்யப்பட்டிருந்தன. விதவிதமான கனிகள், கொட்டைகள் முதலியன வேளைக்கு வேளை கிளிக்கு ஒழுங்காக அளிக்கப்பட்டன. கிளியைக் குளிப்பாட்டுதற்கும் கூட்டைச் சுத்தம் பண்ணுதற்கும் ஒரு தனி மனிதன் நியமிக்கப்பட்டிருந்தான். அப்பறவை பேசும் வல்லமை மிகப் பெற்றிருந்தது. அதைக் கண்டும் கேட்டும் களிக்கப் பலர் அங்கு வருவதுண்டு. ஆனால், ஒருவருமில்லாத வேளைகளில் கிளி தன் நிலைமையைப் பற்றி எண்ணித் துயருற்றிருக்கும் :— " கூடு வெள்ளிக்கூடாயிருப்பதால் ஆவதென்ன ? உண்டிக்கும், ஏவலாளுக்கும், என்னைக் கண்டு மகிழ்பவருக்கும் குறையொன்றுமில்லை. இது போன்ற வாய்ப்பு எல்லாருக்கும் கிடையாது என்பது உண்மை. ஆயினும் நான் செய்வது சிறைவாசம் தானே ! பந்தங்களுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் ஒரு முடிவில்லை. என் இனத்தாருடன் மரக்கிளைகளில் மகிழ்வுற்றிருப்பதற்கு ஒப்பானது யாது உளது? வனம் வேண்டியவாறு உணவு அளிக்கிறது. நீராடுதற்கும் பருகுதற்கும் ஓடைகளுக்குப் பஞ்சமில்லை. செல்லுமிடமெங்கும் தங்குவதற்கு வானுற வளர்ந்த விருக்ஷங்கள். இருக்குமிடத்தை அசுசிப் படுத்துவது என்பது ஆங்கில்லை. வீசும் காற்றும், படியும் மேகமும், பொழியும் மழையும் எவ்வளவு ஆனந்தத்தை ஊட்டுவனவாயிருந்தன ! ஐயோ, அத்துடன் சீர்தூக்குங்கால் இது போழ்து நான் அடைந்துள்ள கதி யாது? என் உற்றார் உறவினருடன் கூடிக் கங்குகரை காணாத வானவெளியில் நான் எத்தனை தூரம் வேண்டுமானாலும் பறந்து செல்லலாம். அந்த இயற்கை வாழ்க்கையோடு இந்தச் செயற்கை வாழ்க்

கையைச் சீர்தூக்குவது எங்ஙனம்? வெட்டவெளியை மெய் யென்றிருக்கும் எனக்குப் பஞ்சரம் என்னும் இப்பந்தத்தைப் போக்கும் நாள் இப்பிறவியில் கிடைக்குமா?" எனக் கிளி இவ்வாறெல்லாம் எண்ணி ஏங்குவதுண்டு.

ஒருநாள் முனிவருடைய முன்னிலைக்கு அடிக்கடி செல் கின்ற ஒருவர் ஜமீன்தார் வீட்டுக்கு வருகின்றார். அப்பெரி யாரின் பெருமையைப் பற்றிப் பலவாறு பேசிவிட்டுத் திரும் பிப் போகிறார். வாயிலண்டை பஞ்சவர்ணக்கிளி தென்படு கிறது. அத்துடன் சிறிது சல்லாபம் செய்ய அவர் முயலு கிறார். ஆனால் வழக்கத்துக்கு மாறாகக் கிளி பதில் ஒன்றும் சொல்லாது வாட்டமுற்றிருக்கிறது.

மனிதன்: கிளியே! நீ ஏன் இன்று என்னோடு பேச மாட்டேனென்கிறாய்?

கிளி: நீங்கள் எனக்கு ஒரு சிறு காரியம் செய்து வைப்பீர்களா?

மனிதன்: கூடுமானால் அப்படியே செய்கிறேன்.

கிளி: உலகனைத்துக்கும் உங்கள் முனிவர் விமோசனத் துக்கு வழிகாட்டுகிறார். எனக்கு வழி யாதென்று அப்பெரி யாரிடம் கேட்டு வந்து சொல்வீராகில், எழுமையிலும் நான் உங்களுக்குக் கடப்பாடுடையவனாவேன்.

மனிதன்: சரி, பார்ப்போம்.

கிளிக்குத் தாம் கொடுத்த வாக்கைப்பற்றி அம்மனிதர் மறுகணமே மறந்துவிடுகிறார். நாட்கள் சில கழிந்தன. ஒரு நாள் பலருடன் ஒன்றாக இம்மனிதரும் அம்முனிவர் முன்பு உட்கார்ந்திருக்கிறார். எல்லாம் ஒரே அமைதி. முனிவர் மனது இவ்வுலகில் இல்லை; உயர்நிலையில் அது உலவிக் கொண்டிருக்கிறது; உடல் வரைந்த சித்திரம் போன்று வீற்

றிருக்கிறது. நெடுநேரத்துக்குப் பிறகு வெளியுலக உணர்ச்சி வருகிறது. கண் திறந்து பார்க்கிறார். அப்போது கிளியின் கேள்வி, வாக்குக்கொடுத்த மனிதர் ஞாபகத்துக்குப் பளிச் சென்று வருகிறது. உடனே அதை முனிவர் முன்னிலையில் சமர்ப்பிக்கிறார். பெரியார் முக விலாசத்தில் புன்முறுவல் பொலிகிறது. ஆனால் பேச்சொன்றுமில்லை. பழையபடி அமைதி. பெரியார் கண்மூடி மோன நிலையில் அசை வற்றிருக்கிறார்.

சாந்தத்துக்கிடையில் பலர் உள்ளத்தில் ஒருவகைத் துக்கம் வந்து தாக்குகிறது. புரண்டோடும் ஆற்றோரம் அமர்ந்திருந்த அப்பெரியார் உடலில் சிறிது பதைபதைப்பு உண்டாகிறது. திடீரென்று மூர்ச்சை தவறிச் சரீரம் கீழே சாய்கிறது. அதைத் தாங்கிப் பிடிக்க இரண்டு மூன்றுபேர் முன்னுக்குத் தாவியோடுகின்றனர். ஆனால் அதற்குள் உடல் ஆற்றில் விழுந்து விடுகிறது. சிறிது தூரத்துக்குக் கீழ் அது சுழல்கின்ற தண்ணீரில் மேலே வருகிறது மறுபடியும் மறை கிறது. பிறகு, அப்பெரியார் திருமேனி தென்படவேயில்லை. ஆற்றில் மூழ்கி மாண்டுபோனார்! அக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தவர் உள்ளத்தில் இடி விழுந்தாற்போலாயிற்று. நதியினுள் குதித்து அவரைத் தப்புவிக்க யாரும் துணிய வில்லை. குதித்தும் பயனில்லை. நீர்ப்பெருக்கு அவ்வளவு வேகம் வாய்ந்திருந்தது.

கிளியின் தூது கொண்டுவந்தவர் தம்மையே நொந்து கொண்டார். ஒருவேளை அப்பறவைக்கு உதவி செய்ய முடி யாமையால் அவர் தம்மையேமாய்த்துக்கொண்டாரோ என்று அஞ்சினார். தாம் ஏன் ஓர் அற்பப் பறவையின் செய்தியை அப்பெரியாரிடம் பகர்ந்திருக்க வேண்டும் என்ற குழப்பம் அவருக்கு உண்டாயிற்று. ஒன்றும் பேசாது அவர் ஜமீன்தார்

இல்லத்துக்கு ஏகினர். அவரைக் கண்டதும் தனக்கு ஏதாவது செய்தி அனுப்பப்பட்டதா என்று கிளி ஆவலுடன் கேட்டது. உடனே அம்மனிதர் தம் சினத்தையெல்லாம் கிளியின்மீது செலுத்தினர்: "அற்பப் பறவையே! உன் பிரச்னையைக் கேட்டபின்னல்லவோ அப்பெரியார் ஆற்றில் மூழ்கி மாய்ந்துபோனர்! இதுவரையில் அவர் யாருடைய துன்பத்தையும் துடையாதிருந்ததில்லை. அத்தகைய பெரியாரைத் தொலைத்துவிட நீ தோன்றினய் போலும்."

கிளி பதில் ஒன்றும் சொல்லவில்லை. சிந்தனையில் மூழ்கி மௌனமுற்றிருந்தது. சிறிது நேரத்துக்குள் அதற்கு விசனத்தால் வலிப்பு வந்துவிட்டது. உடலையெல்லாம் உதறிக்கொண்டு, கூட்டின் கீழ் மல்லாந்து வீழ்ந்தது. "கர்—கர்" என்று கத்திக்கொண்டு உயிர்விட்டது கிளி. "என்ன விபரீதம்! துயரத்தின்மேல் துயரம்" என்றுர் செய்தி சொல்ல வந்த மனிதர். கிளியின் பிரேதத்தையும் ஆற்றில் எறிந்துவிடுவதாகத் தீர்மானிக்கப்பட்டது. கூண்டோடு அதைத் தூக்கிக்கொண்டு போயினர். இதற்குள்ளாக ஆற்றங்கரையில் ஏராளமான ஜனங்கள் கூடிவிட்டனர். மறைந்துபோன முனிவரைப்பற்றிய பேச்சே எங்கும் நடந்தது. அவ்வளவு பிரியமாக வளர்த்த கிளியை இப்போது செத்தபின் யாரும் தீண்ட முன்வரவில்லை. கூட்டைத் திறந்து அது ஆற்றில் விழும்படி குலுக்கினர்.

பிணமாக விறைத்துக் கீழே விழுந்த பறவை,—என்ன ஆச்சர்யம்!—தண்ணீரில் படுமுன்பு உயிர்பெற்று மேலே பறந்தது. அது சொல்வதாயிற்று:—'மானுடரே, கேளுங்கள். அம்முனிவரிடம் நீங்கள் பெற்ற உபதேசம் பெரிதல்ல; நான் விடுதலையடைய என்ன செய்வதென்பதை அவர் செய்கையால் காட்டினர். செத்தால் பிழைக்கலாம் என்பது

வேதாந்தத்தின் கோட்பாடு. உலக ஆசைகளுக்கெல்லாம் செத்தவர்போல் ஆனுர் அப்பெரியார். அதன் பயனுகவே அவர் முனிவர் ஆனுர்.

**பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
**நெறிநின்ருர் நீடுவாழ் வார்**

என்பது பொய்யாமொழி. உடலில் உயிர் இருக்கும்போதே உடல் இயல்புக்கு இறந்தவன்போல் ஆய்விடுபவனே மேலோன் ஆவான். இந்த உண்மையை நான் என் நிலைமைக்குத் தக்கவாறு அனுஷ்டிக்க வேண்டுமென்று முனிவர் செய்துகாட்டினுர். அதைக் கேள்வியுற்ற நான் செத்தாற் போல் பாசாங்கு செய்தேன். உண்மைக்கு ஒப்பப் பாசாங்கு செய்ததன் பலனுக நான் இப்போது கூட்டினின்று விடுதலையடைந்து, என் இயற்கை வாழ்வைப் பெறுகின்றேன். நான் இனி மீண்டும் கூட்டினுள் அடைபடமாட்டேன். விவேகிகள் வாஸ்தவமாகவே ஆசாபாசங்களுக்கெல்லாம் செத்தவர் போல் ஆய்விடுவாராயின், அவர்கள் எத்தகைய பெருவாழ்வையும் ஏன் பெறமாட்டார்கள்!"



# இறைவனை வணங்கிய தலை

இரகுநாததாஸ் என்று அழைக்கப்பட்ட, இடைத்தர வயதுடைய ஒருவர் சுமார் அறுபது வருஷங்களுக்கு முன்பு ஆங்கிலச் சைன்யத்தில் ஒரு சிப்பாயாகச் சேர்ந்திருந்தார். அவருடைய பெற்றோர்களைப் பற்றியாவது, பிள்ளைப்பருவத்தைப் பற்றியாவது நமக்கு ஒன்றும் தெரியாது. ஐக்கிய மாகாணங்களில் ஏதோ ஓர் ஊரில் பிறந்தவர் என்பது மட்டும் நிச்சயம். ராணுவ உத்தியோகத்துக்கு அவர் முற்றும் பொருந்தியவராய் இருந்தார். திடகாத்திரமுடைய தேகம், அஞ்சாத நெஞ்சம், ஓயாத உழைப்பு முதலியன அவருடைய பூஷணங்களாயின. பேருக்கத்துடன் அவர் தம் கடன் ஆற்றுவார். படை வீரனுடைய இயல்புக்கு ஏற்ப அவர் அதிகாரியின் ஆணைப்படி நடப்பார். இந்த உயர் தன்மைகளையெல்லாம் முன்னிட்டுச் சேனைத்தலைவர் ரகுநாததாஸரிடம் அபிமானம் மிகக் காட்டிவந்தார். இந்தியத் துருப்பு ஒருவன் ராணுவத்தில் அடையக்கூடிய உயர்ந்த ஸ்தானத்தைக் காலக்கிரமத்தில் பெறுவது அவருக்கு எளிதாயிருந்தது.

பட்டாளத்தின் ஒரு பகுதி சுற்றுப்பிரயாணம் புறப்பட்டது. அதில் ரகுநாததாஸரும் கூடியிருந்தார். ஒரு கிராமத்துக்கருகில் சேனை சில வாரங்கள் தங்கியிருந்தது. இரவில் காவல் காக்கும் கடமை நமது கதாநாயகருக்கு அடிக்கடி ஏற்பட்டது. அப்போது அவரிடத்திருந்த மற்றோர் உயர் தன்மை பொலிவுற்று விளங்கலாயிற்று. கிராமத்தில் இரவு தோறும் ராமபஜனை பரமானந்தமாக நடைபெற்று வந்தது. அது ரகுநாததாஸருடைய உள்ளத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகக் கொள்ளைகொண்டு போக ஆரம்பித்தது. ஓர் இரவு அவர் வழக்கம்போலச் சேனைக்குரிய உடை தரித்துத் துப்

பாக்கி முதலிய ஆயுதங்கள் தாங்கிக் காவல் காத்திருந்தார். அப்போது "ரகுபதி ராகவ ராஜாராம், பதித பாவன சீதா ராம்" என்ற கோஷம் அவருக்குக் கர்ணமிர்தம் ஊட்டிற்று. துப்பாக்கி கையினின்றும் நழுவியது. ராணுவச் சின்னங்களை யெல்லாம் கழற்றிவைத்தார். ஒரு பாமரன் போன்று வேஷ்டியும் சட்டையும் தரித்தவராய்க் கிராமத்துக்கு ஓட்டம் பிடித்தார்; ராம பஜனையில் கலந்துகொண்டார். ஆடினார்; பாடினார்; பரமானந்தமாகக் காலங்கழித்தார். விடியுமுன்பு தம் வேலையில் வந்து நின்றுகொண்டார். செய்ததையே திரும்பத் திரும்பச் செய்வது மனதின் இயல்பு. நல்வழியிற் செல்லும் மனம் மேலும் நலத்தையே நாடுகிறது; கெட்ட வழியிற் சென்றாலும் அப்படியே. ரகுநாததாஸ் செய்தது ராணுவச் சட்டத்துக்கு விரோதமானது. அவர் செய்த குற்றம் ஓர் இரவோடு நின்று விடவில்லை. அவர்தான் என் செய்வார்! காவல் காக்கும் கடமையை மேற்கொண்டு நிற்கிறார். நள்ளிரவில் ராமநாமம் காதில் வீழ்கிறது. உடனே தம்மை மறந்து புறப்பட்டு ஓடிவிடுகிறார். இவ்வாறு இரவுகள் பல கழிந்தன. ஆனால் பலநாள் திருடன் ஒரு நாளைக்கு அகப்படுவான் அன்றோ! இரவில் சோதனைக்கு வந்த சைனிகன் ரகுநாத தாஸைக் காணவில்லை. சமாசாரம் சேனைத் தலைவர் காதுக்கு எட்டிவிட்டது. குற்றம் செய்தவனைப் பிடித்துக்கொண்டு வரும்படி அவர் கட்டளையிட்டார்.

"நேற்றிரவு நீ ஏன் உன் இடத்தில் இருக்கவில்லை?"

"வழக்கம்போல் ஓடிவிட்டேன்" என்றார் ராமபக்தர்.

"வழக்கம்போலா? என்ன வழக்கம்? எங்கே ஓடுவது?"

"இரவில் கிராமத்தில் ராமபஜனை நடக்கிறது; அதைக் கேட்கும் போதெல்லாம் என் கடமையை மறந்துவிட்டு ஓடி

விடுகிறேன்" என்று தாமே முழு வரலாற்றையும் சொல்லி விடுகிறார்.

"இதற்குத் தண்டனை என்னவென்று தெரியுமா?" என்று சேனைத் தலைவர் அதட்டுகிறார்.

"தெரியும். இக்குற்றத்துக்காகச் சுட்டுக்கொல்வது ராணுவச் சட்டம்" என்று ரகுநாததாஸர் தம் குற்றத்தை மறைக்காது வெளியிடுகிறார்.

"நல்லது, இந்த ஒரு தடவை மன்னிக்கிறேன். மறுபடியும் இக்குற்றத்தைச் செய்வாயானால், சட்டப்படி உயிர் துறக்க வேண்டியதுதான்" என்று எச்சரிக்கை பண்ணி அனுப்புகிறார்.

காவல் காக்கும் முறை அன்றிரவு மறுபடியும் ரகுநாத தாஸருக்கு ஏற்படுகிறது. எப்படியாவது உயிர் பிழைக்க வேண்டும் என்பதல்ல அவருடைய முக்கிய ஆசை. ராணுவத் தலைவருடைய கட்டளையை மீறி நடப்பது விசுவாசமுடைய துருப்புக்கு உசிதமன்று. கடமையினின்று வழுவாதிருப்பது தம் தருமமென்று அவர் உணர்கிறார். நடுநிசி. துப்பாக்கியும் கையுமாகத் தம் கர்மத்தில் கண்ணுடையவராய் அவர் நின்று கொண்டிருக்கிறார். பழையபடி ராம நாம சங்கீர்த்தனம் காதுக்கு விருந்தளிக்கிறது. உடல் கட்டை போன்று இங்கு நின்று கொண்டிருக்கையில் உள்ளம் அங்கு ஓடி விடுகிறது. சற்று நேரத்திற்குள் உடலும் உயிர் இருக்குமிடத்தை நாடி நடக்கப் பார்க்கிறது. அப்படிச் செய்வது சரியல்லவென்று அவர் மறுபடியும் மனதையும் மேனியையும் ஒழுங்குபடுத்திக் கடமையில் நிறுத்துகிறார். இந்தப் போராட்டம் திரும்பத் திரும்ப நடைபெறுகிறது. முடிவில் ராமநாம ஆசை ராணுவச் சட்டத்தையெல்லாம் மீறி விடுகிறது. ரகு

நாததாஸ் இரவில் பெரும்பகுதியை பஜனை கோஷ்டியுடன் கழிக்கிறார். அப்போது அவர் அனுபவித்த ஆனந்தத்தை உலகில் எதனுடனும் ஒப்பிட முடியாது.

மறுநாள் காலையில் அவர் துப்பாக்கியைத் தலைவரிடம் சமர்ப்பிக்க வந்தார். தாம் செய்தது குற்றம் என்பது அதன் பொருள். சுட்டுக் கொல்லப்படுவதற்கு அவர் சிறிதும் அஞ்சினாரில்லை.

ஆனால் சேனைத் தலைவருக்கு இது ஒன்றும் விளங்க வில்லை. அவர் பகர்கின்றார்:— "ரகுநாத், நீ ராணுவச் சட்டத்தை மீறி நடப்பாயென்று என்னால் நம்பமுடியவில்லை. உன் குற்றத்தை நீயே ஒப்புக்கொண்ட பிறகும் உன்மீது நான் கொண்டிருந்த விசுவாசத்தை மாற்ற இயலவில்லை. நேற்றிரவு நானே மூன்று தடவை வந்து சோதித்துப் பார்த் தேன். ஒவ்வொரு தடவையும் உன்னைக் கண்டேன். என் கேள்விக்கு நீ பதில் விடுத்தாய். இப்போது இப்படிப் பிதற்றுவதன் அர்த்தமென்ன?"

ரகுநாததாஸ் ஸ்தம்பித்து நிற்கிறார். பளிச்சென்று அவரது உள்ளத்தில் உண்மை விளங்குகிறது... "ஆஹா! ரகுராமனல்லவா எனக்காக வந்து சிப்பாய்த் தொழில் செய் தான்! அற்பனாகிய என்னுடைய உடையைத் தரிக்கும்படி யும், கோதண்டத்துக்குப் பதிலாகத் துப்பாக்கியைத் தூக் கும்படியும் நான் அவனுக்குத் தொந்தரவு கொடுத்து விட் டேனே!"

பின்பு சேனாபதியைப் பார்த்து அவர் பகர்கிறார்:— "ஐய, நான் இனி உமக்கு ஆளாயிருக்கச் சம்மதியேன். வேண்டுமானால் சட்டப்படி என் சரீரத்தைச் சுட்டு மாய்த்து விடுங்கள்; அல்லது நான் போகிறபடி என்னை விட்டு விடுங்

கள். என் உடல் பொருள் ஆவியையெல்லாம் ராகவனுக்கு ஒப்படைத்து விட்டேன். அவனை வணங்கிய தலை இனி உம்மை வணங்காது."

ரகுநாததாஸரைச் சேனையின் மேலான பதவிக்கு உயர்த்தவேண்டுமென்று தலைவர் எண்ணியிருந்தார். ஆனால் அவர் தமக்கு உகந்த வேறொரு வழியைத் தேடிக்கொண்டார். ஆதலால், தலைவர் சிறிதும் மனமிசையாதவராய் அவரை ராணுவ உத்தியோகத்தினின்று நீக்கினார்.

ரகுநாததாஸர் பின்பு துறவறம் பூண்டு, இமைப்பொழுதையும் வீண்போகாது ராம பஜனையிலும், ஜபத்திலும், தியானத்திலும் காலங்கழித்து வருவாராயினர். பேராற்றலுடையவர் உலக வியவகாரமாயினும் சரி, பாரமார்த்திகமாயினும் சரி, எதில் பிரவேசிக்கின்றனரோ அதைத் தீவிரமாகச் செய்து சாதிப்பர் என்பதற்கு இப்பெரியாருடைய வாழ்வு சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். துறவியான பிறகு மற்றொரு அரும்பணியையும் இவர் செய்துகொண்டு வந்தார். சரஸ்வதி நதிக்கரையோரத்தில் இவர் ஸ்தாபித்திருந்த ஆச்ரமத்தில் ஆயிரக்கணக்கான பேர்களுக்கு அன்னம் வழங்கப்பட்டு வந்தது. அதற்குப் பொருள் உதவி வேண்டுமென்று அவர் யாரையும் போய்க் கேட்டது கிடையாது. ரகுராமனது உதவியையே அவர் நாடி நின்றார். அவனது அருளால் யார் யாரோ வேண்டிய பொருள்களையெல்லாம் தாமே வலியக் கொண்டுவந்து கொடுத்துவிடுவர்.

---

# மாந்திரிகன்

கலைகளிலும் மற்றும் பல துறைகளிலும் பாரத நாடு மகோன்னத பதவியடைந்திருந்த பண்டைக்காலம் ஒன்று இருந்தது. அக்காலத்திய வேந்தர்களும் முற்றத் துறந்த முனிவர்களும் பிறப்பு, இறப்பு முதலிய அரும்பெரும் விஷயங்களை ஆராய்தற்பொருட்டு மிக நெருங்கிப் பழகிவந்தார்கள். கல்வியறிவில் தேர்ந்த மேன்மக்கள் தங்களது பரந்த எண்ணங்களை உலகில் பரப்புதற் பொருட்டு மன்னர்களது சமூகங்களை நாடிச் சென்றனர். சித்திர வேலைகளில் கைதேர்ந்த சிற்பிகளும் தொழிலாளர்களும் அரசாங்கத்தால் ஆதரிக்கப்பட்டு அமைதியாகத் தத்தமது தொழிலைச் செவ்வனே செய்து வந்தார்கள். தத்துவ ஆராய்ச்சிகள் யாவும் அக்காலத்தில் தான் ஒப்பற்ற உயர்வடைந்திருந்தன. சீரும் சிறப்பும் வாய்க்கப்பெற்ற அந்நாளில், உத்தர பாண்டவ நாட்டிலே அரசு புரிந்துவந்த இலவணன் என்ற மன்னனொருவன் விபரீத அனுபவமொன்றை அடையலானான்.

அளவிலா அறிவு, ஆண்மை, ஆக்கம் முதலியவற்றை அம்மன்னன் படைத்திருந்தான். அறிவுக்குத் தேவையான கலைமகள் அவனது உள்ளத்தே குடிகொண்டிருந்தாள். அதுவுமன்றி, ஆக்கம் பெறுதற்கென அவன் தொடுத்த கருமங்கள் அனைத்திலும் திருமகள் அன்பு சுரந்து ஆதரித்து வந்தாள். மேலும் அக்கோமகனது செங்கோலுக்கு விஜய லக்ஷ்மி வல்லமை தந்து, அவன் வேற்றரசுகளுடன் புரிந்த போர்கள் அனைத்திலும் அவனுக்கு யாண்டும் வெற்றியே அளித்து வந்தாள். அவனது நாட்டில் அமைதி பெருகி, ஆக்கம் மலிந்திருந்தது. ஆதலாலே நாடாளும் பொறுப்பை அறிவுடைய அமைச்சர்கள்பால் ஒப்புவித்துவிட்டுத் தான் மிக

விரும்பிய அத்யாத்மிக வாழ்க்கையில் மனம் ஊன்றியவனாய் இலவணன் காலங்கழித்து வந்தான்.

இப்புவனம் எங்கிருந்து உண்டானது, எவ்வாறு காக்கப்படுகிறது, மீண்டும் எங்குச் சென்று ஒடுங்குகிறது என்ற ஐயம் ஒன்று இடையறாது அவனது மனதைக் குழப்பமுறச் செய்தது. நூல்கள் பல படித்ததுமல்லாமல் தன் தேசமெங்குமிருந்த கற்றோர் பலருடன் அக்கோமகன் கலந்து பேசினானெனினும் இந்த ஒரு விஷயத்தில் மட்டும் அவனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. இவ்வுலகம் நித்தியமல்லவென்றும் கனவு போன்று நிலையற்றதென்றும் கானல் நீர்போலக் கற்பனை மாத்திரமென்றும் அவன் நன்கறிந்திருந்தான். அது இன்று இருப்பது கண்கூடு எனினும், நாளை நாம் மாண்டு கண் மூடிவிடும்போது அதுவும் மறைந்து போய்விடுகிறது. வேறோர் அத்தாட்சியின்றியே இது அவனுக்குத் தெற்றெனத் தோன்றியிருந்தது. ஆனால் இந்தப் புவனத்தில் வரவும் போக்கும் எங்கிருந்து, எவ்வாறு உண்டாகின்றன என்பது தான் அவனுக்குப் புலப்படவில்லை. தோன்றியழியும் உலகத்துக்கப்பால் ஏதேனும் உண்டா? இக்கேள்விகளுக்கு மாத்திரம் அவனுக்குச் சரியான பதில் கிடைக்கவில்லை. புத்திக்கு எட்டினால் மட்டும் போதாது. பிரத்தியட்ச அனுபவமாக வேண்டுமென்பதே அவ்வேந்தனது அவா. அப்போது எதிர்பாராத நிகழ்ச்சியொன்று நேரலாயிற்று. அது வருமாறு:—

அற்புத ஆற்றல்கள் படைத்திருந்தவனும் கீர்த்தி மிக வாய்க்கப்பெற்றவனுமான மாந்திரிகன் ஒருவன் ஒருநாள் உத்தர பாண்டவ நாட்டின் தலைமைப் பட்டணத்துக்கு வந்து சேர்ந்தான். ஜால வித்தையிலும் மனோவசீகரத்திலும் அவனுக்கு நிகரானவன் யாருமில்லை என்னும் வதந்தி

நாடெங்கும் பரவியிருந்தது. ஆதலால் அப்பட்டணத்தின் பிரபுக்கள் பலர் அவனது ஜாலத் திறமையைத் தங்கள் முன்னிலையிலே காட்ட வேண்டுமென்று அழைத்திருந்தனர். ஆனால் அவர்கள் ஏமாற்றமடைந்து மனம் வருந்தும்படி அவர்களெதிரே தனது சாமர்த்தியத்தைக் காட்ட அவன் மறுத்துவிட்டான். வெகுமதி மிகத் தருவதாக அவர்கள் சொன்னதையும் அவன் பொருட்படுத்தவில்லை. தன் திறமையை அவர்களுக்குக் காட்ட மறுத்ததற்குக் காரணம் இன்னதென்று அவன் சொல்ல முன்வரவில்லை. ஆனால், "எனது மாந்திரிகத்தை உங்கள் மன்னனது முன்னிலையில் தான் காட்டுவேன்" என்று மட்டும் அவன் எல்லாருக்கும் பதில் அளித்து வந்தான். இவ்வாறு ஒரே பிடிவாதமாக அவன் இருந்தமையால், கடைசியாக எல்லாரும் அவனது இச்சைக்கு இணங்கினர்கள்.

எவ்வளவு சன்மானம் கொடுத்தாலும் அதை ஏற்றுக் கொள்ள இணங்காத அந்த வெளிநாட்டு மாந்திரிகனது விபரீத நடத்தையைப் பற்றிய தகவல் விரைவில் வேந்தனது காதுக்கும் எட்டியது. "வேறு எந்தப் பிரபுவாலும் கொடுக்க இயலாத அவ்வளவு பெரிய வெகுமதியை எதிர்பார்த்து எம்மிடம் தன் வித்தையைக் காட்டக் கருதினன் போலும்" என அரசனும் எண்ணினன். மாந்திரிகனது ஆற்றலையறிய அரசன் அவாவுடைத்திருந்தான். எனினும் இதில் ஏதாவது வஞ்சகம் இருக்குமோவென்று அஞ்சி, அவனது அந்தரங்க நோக்கத்தை அறிய மாறுவேடம் தாங்கிய மந்திரியொருவனை மாந்திரிகனைப் பேட்டி காண அனுப்பி வைத்தான்.

அவ்வாறே அமைச்சனும் தன் நோக்கத்தை நிறைவேற்றச் சென்றான். மாந்திரிகன் எளிய பாங்கும் யதார்த்த குண

மும் உடைத்திருந்தது அவனுக்கு அடங்கா அகமகிழ்ச்சியை உண்டுபண்ணிற்று. வஞ்சகத்தின் அறிகுறி எதையும் அவன் காணவில்லை. தான் உத்தர பாண்டவத்துக்கு வந்தது தனது மாந்திரிக வன்மையை அரசனுக்குக் காட்டுதற்பொருட்டே யொழிய பொருள் சம்பாதிப்பதன் பொருட்டல்லவென்று அவன் மாறுவேடம் பூண்டிருந்த மந்திரிக்குத் தெரிவித்தான். "மன்னர் ஒரு புத்திமானுகையால் அவர் நான் செய்யும் செய்கையைக் கண்டு மிகப் பயனடைவார். கேவலம் அறிவுக்கு விஞேதங்காட்ட நான் இங்கு வரவில்லை. எனது அற்புதக் காட்சிக்காக வெகுமதி எதுவும் நான் பெறமாட்டேன். இந்த நிபந்தனையுடன்தான் நான் இராஜமாளிகைக்கு வருவேன்" என்ருன் மாந்திரிகன். வயிற்றுப் பிழைப்புக்காக மாந்திரிகத்தின் பெயரால் உலகத்தை வஞ்சிப்பவர்கள் போன்றவனல்லன் இவன் என்றறிந்த அமைச்சன் இவனைப்பற்றித் திருப்தியடைந்தவனுகத் திரும்பிச் சென்ருன். தனக்கும் புதிதாக வந்திருந்த பேர்பெற்ற மாந்திரிகனுக்குமிடையே நடந்த சம்வாதம் அனைத்தையும் அவன் அரசனுக்கு அறிவிக்கவே, அரசனும் அந்த நூதன வித்தைக்காரனை அரண்மனைக்கு அழைத்துவரத் தூதன் ஒருவனை ஏவினன்.

அழைப்புக்கு இணங்கிய மாந்திரிகனும் குறிப்பிட்ட நாளன்று அரண்மனை போய்ச் சேர்ந்தான். அமைச்சர்களும், அறிஞர்களும், பிரபுக்களும், மற்றவர்களும் புடைசூழ, ஒரு விசாலமான கூடத்திலே, இரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஒரு பொற் சிங்காதனத்திலே வேந்தன் வீற்றிருந்து, மாந்திரிகனைக் கொலு மண்டபத்துக்குள் வர ஆக்ஞாபித்தான். உயர்ந்து வளர்ந்த சரீரமுடையவனும், கூரிய கண்ணேக்கமுடையவனும், கம்பீர நடையுடையவனுமாகிய அந்த ஜாலவித்தைக்காரன் அரையிலே மஞ்சளாடை அணிந்து

கொண்டு, தனது தோளிலே அதன் இயல்பான அழகைத் தவிர வேறு எந்த ஆடை ஆபரணமும் இல்லாதவனாய் இராஜனது சன்னிதியில் தோன்றி, கோமானுக்குரிய வந்தனை வழிபாடுகளைச் செலுத்திவிட்டு, தனது செப்படி வித்தையைத் துவக்க அனுமதி வேண்டி நின்றான். வேந்தனது வாயினின்று உத்தரவும் பிறந்தது. மாந்திரிகன்மாட்டு ஒரு பெரிய மயிலிறகுத் தோகையைத் தவிர வேறு எந்த ஆடம்பரமும் காணப்படவில்லை. அந்தத் தோகையை அவன் தனது வலக்கையில் பிடித்தான்.

அவனது கைச் சாதுர்யத்தை என்னென்று சொல்வது! கரத்தைச் சிரசுக்கு மேலே ஏந்தி, விண்ணினின்று கனிகளும் மலர்களும் கொய்தெடுத்துப் புசிக்கவும் மணம் நுகரவும் சபையோர்கள் முன்னிலையிலே வைத்தான். அவன் விரும்பிய மாத்திரத்தில் புதிய புதிய பண்டங்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. உள்ளத்தைக் கவரவல்ல ஓசைகளும் இன்னிசைப் பாக்களும் வெட்டவெளியிலிருந்து காதில் விழுந்தன. அவனது ஆக்ஞைக்குட்பட்டு அக்கூடத்திலிருந்த ஒளியும் உயர்வு தாழ்வு அடைந்து வந்தது. திடீரென்று புறாக்கள் உருவெடுத்துத் தோன்றிச் சிறகுகளை அடித்துக் கொண்டும் இராஜ சிங்காதனத்தை வட்டமிட்டுக்கொண்டும் பறந்தன. அவைகளில் ஒன்றைப் பற்ற மன்னன் கையை நீட்டியபோது அது திடீரென்று மறைந்து போய்விட்டது. அழகில் சிறந்த உருவங்கள் அந்த இராஜ சபையில் தோன்றித் தோன்றி மறைந்தன. ஆதலாலே தேவர்களுங்கூட இந்த விபரீத மனிதனது கட்டளைக்குட்பட்டு நடந்தார்கள் போலத் தோன்றிற்று. அக்கூடத்தின் உச்சியிலே மேகங்கள் கூடி வர்ஷித்தன. ஆனால் அது அங்குக் கூடியிருந்த யாரையும் நனைக்கவில்லை. அதைக் காணலுற்றார் அந்த மாந்திரிகன்

செய்த அற்புதங்கள் யாவும் காண்பதற்கரியவை என வியந்துரைத்தனர்.

இந்த ஆச்சரியச் செய்கைகளைக் கண்ட இலவண வேந்தன் வியந்திருந்தான். அப்போது மாந்திரிகன் புதியதொரு ஜாலம் செய்யத் துணிந்து, அதற்கு அரசனது அனுமதியை மற்றுமொருமுறை வேண்டி நின்றான். அவனது சாமர்த்தியத்தையும் கபடின்மையையும் கண்ட கோமகன் அவன் விரும்பியவாறெல்லாம் செய்ய உத்தரவு பிறப்பித்தான். மாந்திரிகன் சிங்காதனத்திற்கெதிரே தாழப்பணிந்து வணங்கி விட்டு, மயிலிறகுத் தோகையைக் கையிலேந்தி திருமந்திரங்கள் பல உச்சரித்துக்கொண்டு, மன்னனெதிரே அதைப் பெருவட்டமிட்டுச் சுழற்றினன். அழகிய இறகுகளை அவன் திறமையுடன் சுழற்றியது வேந்தனது உள்ளத்தைக் கவர்ந்தாற்போலிருந்தது. மன்னன் இமைப் பொழுதேனும் இங்குமங்கும் பார்க்க முடியாது போய், தோகையையே நோக்கிய வண்ணமாயிருந்தான். இறகுகளினின்று ஜோதியொன்று தோன்றித் தீப்பொறிகள் வீசிக்கொண்டு சுடர் விட்டெரிய, மன்னன் முற்றிலும் மயங்கி விட்டான்.

பிறகு, இருந்தாற்போல் இறகுகள் காணது போய்விட சிம்மாசனத்துக்கெதிரே தூவெண்குதிரையொன்று நின்றுகொண்டிருந்தது. வஜ்ராயுதத்தைப் போல வலிமை வாய்ந்ததும் வாயுவைப் போல வேகமுடையதுமாகிய அக்குதிரை சிந்து நாட்டு அரசனிடமிருந்து இலவண வேந்தனுக்கு வெகுமானமாக அனுப்பப்பட்டதென்று அதைப் பிடித்துக்கொண்டிருந்த தூதனொருவன் தெரிவித்தான். உலகெங்கும் அதற்கு நிகரான அசுவம் வேறொன்றும் கிடையாது ஆதலால் அதன்மீது ஏறிச் சவாரி செய்யும்படி செப்படி

வித்தைக்காரன் வேந்தனை வேண்டினன். அரசனும் அத் துரகத்தை ஆராய்ந்து பார்க்க ஆசனத்தை விட்டு எழுந் திருக்க எத்தனித்தபோது அவன் திடீரென்று மூர்ச்சையாகி மெய் மறந்து கண்கள் அந்தர்முக நோக்கமாகி, சமாதி அவஸ்தையை அடைந்த யோகி ஒருவனைப் போல் அசை வற்றிருந்தான்.

எதிர்பாராத இந்த மாறுபாடு மன்னன்மாட்டு வந்து விட்டதைப் பார்த்த மந்திரிகள் மருண்டு போனார்கள். ஆனால் சொற்ப நேரத்திற்குள் வேந்தன் மெய்யுணர்வு பெற்று விழித்தெழுந்தான். குதிரையோ காணாது போய்விட்டது! மாந்திரிகன் மயிலிறகுத் தோகையை வீசிக்கொண்டிருந்ததை மாத்திரம் மன்னன் பார்த்தான். அரசனுக்கு ஏதாவது விபத்து நேரலாயிற்றோவென்று அமைச்சர்கள் அவனை ஆவ லுடன் விசாரித்தார்கள். நிகழ்ந்த சம்பவங்களைப்பற்றிக் கோமகன் கூறியதாவது:—

"மாந்திரிகன் மயிலிறகுகளைச் சுழற்றிக்கொண்டே விபரீத வார்த்தைகள் சில சொல்லியபோது நான் மயக்க முறலானேன். என்றாலும் சிம்மாசனத்துக்கெதிரே நின்ற குதிரையொன்றன்மீது அவன் என்னை ஏறச் சொன்னது என் காதில் விழுந்தது. அழகிய அந்த அசுவம் சிந்து நாட்டு அரசனது வெகுமதியென அதைக் கொணர்ந்த தூதன் எனக்குத் தெரிவித்தான். அகமகிழ்ச்சியுடன் நான் ஆசனத்தை விட்டெழுந்து, அக்குதிரை மீதேறினேன். காலத் தையும் சந்தர்ப்பங்களையும் மறந்துவிடத்தக்க விரைவில் நான் சவாரி சென்றேன். அது ஓடிய வேகத்தில் எனக் குண்டான ஆனந்தத்துக்கோர் அளவில்லை. ஓடோடித் தூரதேசமொன்றைப் போய்ச் சேர்ந்தேன். நான் அறியா மலே அஸ்தமன வேளையும் வந்துவிட்டது. அப்போது ஓர்

அடவிக்குள் பாய்ந்து சென்று கொண்டிருந்தேன். திரும்பலா மென்று எண்ணியபோது, ஓங்கி வளர்ந்திருந்த ஒரு மரத்தி லிருந்து வழி மறித்துத் தொங்கிக் கொண்டிருந்த ஒரு கொடி யில் நான் மாட்டிக்கொண்டேன். அக்கொடியிலே அகப் பட்டுக்கொண்ட என்னை அவ்விடத்தே தொங்க விட்டு விட்டு அக்குதிரை பறந்தோடி விட்டது. அந்நிலையினின்று தப்பித்துக் கொள்வது எவ்வாறென்று எனக்கு விளங்க வில்லை. இரவும் வந்துவிட்டது. வேகமாய் வீசிய குளிர் காற்று என்னை இங்குமங்கும் ஆடச்செய்தது. பசியும் தாகமும் பிய்த்துத் தின்றன. உதவியை நாடி ஓலமிட்டு அழைத்தேன். ஆனால் எனது விண்ணப்பத்துக்குச் செவி மடுக்க அவண் யாருமில்லை. இரவு முழுதும் அவ்வாறு காலங்கழித்தேன். வைகறை வந்து பொழுதும் புலர்ந்தது. ஆயினும் நான் அதே கதியிலேதானிருந்தேன். பசியும் தாகமும் அதிகரித்துக் கொண்டே போயின. கொஞ்சம் அன்னத்துக்குக் கைம்மாருக எனது ராஜ்யத்தில் பாதியைக் கொடுக்க நான் ஆயத்தமாயிருந்தேன். எவ்வளவு முயன் றும் அந்நிலையினின்று தப்பித்துக்கொள்ள என்னால் இயல வில்லை. நான் செய்த ஒவ்வொரு பிரயத்தனமும் மென் மேலும் என்னைக் கொடிகளுக்கிடையே கட்டுவித்தது. முழு தும் சோர்வுறலானேன். மேற்கொண்டு எவ்வித எத்தனமும் செய்ய என்னால் இயலவில்லை. தூரதேசத்தில் பட்டினி கிடந்து சாகும்படியான பரிதாபகரமான நிலைமைக்கு நான் வந்து விட்டேன்.

"அப்போது யாரோ பாடுங்குரலொன்று என் காதில் விழ்ந்தது; நான் அவ்விதம் அகப்பட்டுக்கிடந்த திசையை நோக்கி வந்த பெண் ஒருத்தியைக் கண்டேன். எனதருகில் வந்ததும் என்னைக்கண்டு மருண்டு அவள் தூர ஓடினாள்.

அம்மடந்தையிடம் கூடையும் கத்தியொன்றும் இருந்தன. நான் கெஞ்சியழைத்ததற்கு இரங்கி, அவள் திரும்பி வந்து கத்தியால் கொடிகளை வெட்டி என்னை விடுவித்தாள். வனத்திலே புல்லறுக்க வந்திருந்த கரியளான அப்பெண்மணி இழி குலத்தவள் என்பதையறிந்தேன். உணவும் ஒரு பாண்டத்தில் தண்ணீரும் அவள் வைத்திருந்தாள். அதிற்கொஞ்சம் எனக்குத் தரும்படி நான் அவளை வேண்டினேன். ஆனால் அப்பெண்மணியோ, 'அந்த அடாத காரியம் செய்ய நான் ஒருப்படேன்; நீரோ உயர் குலத்தவர்; நானோ அதம ஜாதியைச் சேர்ந்தவள்; என் உணவை உமக்குப் படைப்பதால் குலநாசம் செய்த குற்றம் என்மீது சாரும்' என மறுத்தாள். பசிப்பிணியைப் பொறுக்க இயலாதவனாய் நான் வெட்கம் சிறிதேனுமின்றி அவளை மிக இரங்கி வேண்டினேன். அதற்கு அவள், 'என்னை மணம்புரிய இசைந்தால்மட்டும் நான் தங்களுக்கு உணவு தருவேன்' என்றாள். நானோ வாதாடினேன்; வற்புறுத்தி வேண்டினேன்; கெஞ்சிக் கேட்டேன். ஆனால் அவளது மனதை மாற்றமட்டும் என்னால் இயலவில்லை. முடிவில் வேறொரு வழியுமில்லாதவனாய் நான் அவளது கருத்துக்கிசைந்தேன். உயிர் போம்படியான அந் நிலையில் மற்றென் செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. அவள் தந்த உணவை உண்டு தண்ணீரை அருந்தினேன். ஆனால் அத்துடன் பெருந் துயரமும் உறலானேன்.

"பசியும் தாகமும் தணிந்த பின்பு, அப்பேதை என் கரத்தைப் பற்றிக்கொண்டு என்னைத் தன் கிராமத்துக்கு அழைத்துச் சென்றாள். அந்தச் சேரி மிக அசுசியாயிருந்தது. வெயிலிற் காய்ந்துகொண்டிருந்த புலாலின் நாற்றம் எங்கும் பரவிக்கொண்டிருந்தது. துர்நாற்றம் வீசிய வண்ணமாயிருந்த ஒரு பாழுங் குடிசையில் அவள் குடியிருந்தாள். அந்த

இழி நிலையினின்று தப்பித்துக்கொள்ள வழியொன்றுமில்லாது போய்விட்டது. நான் வாக்களித்த வண்ணம் அவளை விவாகம் செய்துகொண்டேன். ஒரு வாரம் முழுதும் கிராமத்தார் மணக்கோலம் கொண்டாடினார்கள். கள் குடித்து, குரங்கு, கோழி, காகம், பன்றி இவைகளின் புலால் புசித்து, நோன்பு நோற்றார்கள். அச்சமுறுதற்கேற்றதொரு பயங்கர நிகழ்ச்சியாயிருந்தது அது.

"எவ்வாறோ நான் அப்புன்மைக்கு இயைந்தவனாய் விட்டேன். காலக்கிரமத்தில் நாங்கள் செவ்வனே இல்வாழ்வு நடாத்தி, மூன்று புதல்வர்களைப் பெற்றெடுத்தோம். மனைவி மக்கள்மீதுநான் பேரன்பு பூண்டொழுகினேன். வனம் சென்று வேட்டையாடி நான் அவர்களை வாழ்வித்துவந்தேன். பிறகு நெடுங்காலம் மழையில்லாது போய், இறுதியில் மணல் மாரி பெய்ய ஆரம்பித்தது. மண் முழுவதும் உலர்ந்துபோய் விண்ணெங்கும் தூசி பறந்தது. மெலிந்தவர்கள் மாண்டு போக, வலியவர்கள் வெளிநாடுகட்கு விரைந்து ஓடினார்கள். கிராமம் முழுதும் காலியாய்விட்டது. பெண்டு பிள்ளைகளை அழைத்துக்கொண்டு நானும் வெளியேகினேன். அன்ன ஆகாரமின்றி அநேக நாட்களாக நாங்கள் நடந்துசென்றோம். பசிப்பிணியைப் பொறுக்கமுடியாத பிள்ளைகள் அழுதுகொண்டிருந்தனர். நாங்கள் எல்லாரும் தளர்வுற்றிருக்குங்கால் என் மனையாள் நோய்வாய்ப்பட்டு மாண்டு போனாள். எனது உள்ளம் தளர்ந்துகொண்டு வந்தது. பிள்ளைகள் நடக்க இயலாது மெலிந்துபோயினர். உண்ண உணவு சிறிதேனும் இல்லை. மறுநாளே கடைசிப் பிள்ளையும் உயிர் துறந்தது.

"துயரத்தால் பீடிக்கப்பட்டு நான் சோர்வுற்றிருந்தேன். கடைசியாக மெலிந்திருந்த என் பிள்ளைகளைக் கொன்றுவிட்டு நானும்உயிர் துறப்பதே மேலென்றும் தீர்மானித்துவிட்டேன்.

பெரிய தீயொன்று மூட்டி, சீறியெரிந்துகொண்டிருந்த் அதனுள் மூவரும் வீழ்ந்து மாண்டு போகவேண்டுமென்று இருகட்கத்திலும் அவ்விருபிள்ளைகளையும் எடுத்துக்கொண்டு அதனருகே சென்றேன். ஆனால் நான் கால் இடறிக் கீழே விழுந்து ஒரு கல்லின்மீது தலையை மோதிக்கொண்டேன்.

"மூர்ச்சை தெளிந்து விழித்துப் பார்த்தபோது நான் கண்ட ஆச்சரியத்தை என்னென்பேன்! நான் மயக்கத்திலிருந்தபோது கருதியதுபோலக் கீழ்மகனுயில்லாது இலவண மன்னனாய் ஈண்டுச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கக்கண்டேன்."

வேந்தன் இவ்வரலாற்றைச் சொல்லி முடித்ததும் எல்லாரும் இயல்பாகவே ஆச்சரியத்துடன் மாந்திரிகனைப் பார்த்தார்கள். மயில்தோகையைக் கரத்தில் பற்றியவனுய்ப் புன்சிரிப்புடன் அவன் சிம்மாசனத்துக்குச் சிறிது எட்டி நின்று கொண்டிருந்தான். வினவும் நோக்கத்துடன் சபையோர் அனைவரும் அவனைப் பார்த்து நின்றார்கள். எனினும், அவன் பதில் ஒன்றும் உரைக்கவில்லை.

அரசன் மாந்திரிகனிடம் விண்ணப்பித்ததாவது: "வேற்றுருவாய் வந்தநீர் ஒரு சாமானியமனிதரல்லீர் என்பதைக் கண்டுகொண்டேன். எனக்கு ஒரு பெரிய அனுபவம் காட்டி, ஒரு கணப்பொழுதில் எனது தீராத ஐயத்தை அகற்றிவிட்டீர்! மனேசக்தியை என்னென்று சொல்லுவது! பிரபஞ்சத்தைப் படைத்துக் காத்து அழிப்பது யாவும் மனதின் செய்கை என்பதை நான் இப்போது அறிந்துகொண்டேன். எல்லா உலகங்களும், எல்லா அனுபவங்களும் மனதிலேதான் உதிக்கின்றன. கால தேச நிமித்தம் யாவும் மனதின் கற்பனை. சாஸ்திரங்கள் புகட்டுவது யாவும் மெய்யென்பதையும் மகாஞானிகள் பகர்ந்தது யாவும் ஆப்த வாக்கியம் என்பதையும்

நான் இப்போது அறிகிறேன். நீர் ஒரு மகாமுனிவர்; நீரே எனக்குக் குரு; என்னோடு எப்போதும் இங்கு அரண்மனையில் அமர்ந்தருளும்.'' மாந்திரிகன், "அரசே, உமது ஐயத்தை அகற்றுதற்கென்றே நான் இந்நாடு ஏகினேன். வேறு எவருக்கும் எனது சாமார்த்தியத்தைக்காட்ட நான் இணங்கவில்லை. ஒரு மகத்தான தத்துவத்தை நீர் இப்போது கற்றுக்கொண்டீர். அதை எக்காலத்தும் மனதில் வைத்துக் கொள்க. ஆனால் இவ்வளவு கற்றதே போதுமென்று திருப்தி அடைந்து விடாதீர்கள். மேலும் விசாரித்துப் பாரும். இதனினும் மேலான உண்மையொன்று நீர் அறியவேண்டியிருக்கிறது. உமது யதார்த்த வடிவாகிய ஆத்மாவானது மனதுக்கப்பால் இருக்கிறது. நீர் அதை அறியவேண்டும். ஆத்மஞானம் பெற்றபின் பிறப்பு இறப்பினின்று விடுபடுவீர். நித்திய முக்தனாய் விடுவீர். சாஸ்திரங்கள் முறையிடுவதெல்லாம் இந்த ஆத்மனைப் பற்றித்தான். வேந்தே, அதுதான் நீர் என்பதை அறிக" என்று கூறி முடித்தான்.

இப்பொழுது மாந்திரிகனது அடியிணையினின்று ஒளி வீசிய ஆவியொன்று எழுந்து, அவனது உடலனைத்தையும் மூடிக்கொண்டது. அதைப் பார்த்தோர் கண்ணைப் பொத்திக்கொள்ளும்படி அதன் ஒளி பெருகிக்கொண்டே வந்து, பிறகு அது ஒடுங்குகையில் அத்துடன் மாந்திரிகனும் தனது மயில்தோகையுடன் மறைந்து போனான்.

---

# முருகன் அருளா?

குகதாசன் என்ற பக்தர் ஒருவர் சில ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்நாட்டில் வசித்துவந்தார். குமரக்கடவுளின் படை வீடுகளுக்கு அடிக்கடி யாத்திரை போவது அவரது வழக்கம். ஆங்காங்கிருந்த முருக பக்தர்களையும் குகதாசன் நன்கு அறிந்திருந்தார். செல்லுமிடங்களிலெல்லாம் இவருக்கு மரியாதையும் சுமாராக நடக்கும். பக்தர்களது பொருளாதார நிலைக்கும், பரந்த மனப்பான்மைக்கும் ஏற்றவாறு அவர் இடந்தோறும் தங்கும் நாட்கள் குறுகவும் நீளவும் செய்யும். ஆனால் ஒரு வாரத்துக்குமேல் எங்கும் தங்கமாட்டார். கோயில், யாத்திரை என்று சொல்லிக்கொண்டு போய்விடு வார். புறப்படும் பொழுது வழிச்செலவுக்குப் பணம் கேட்டுப் பெறுவதுமுண்டு; கேளாது வருவதுமுண்டு; எவ்விதத்திலும் தேவைக்கு ஏற்ற வருவாய் வந்து கொண்டிருந்தது.

இலங்கையில் கதிர்காமத்துக்குக் குகதாசன் ஒருதடவை போய் வந்தார். அதன் பிறகு புதிய வழக்கம் ஒன்று அவருக்கு ஏற்பட்டது. பல அன்பர்களிடத்துக் காணிக்கைகள் சேகரித்து, அவைகளையெல்லாம் கோவில்களுக்குக் கொண்டு போய்ச் செலுத்துவது முறையாக நடைபெற ஆரம்பித்தது. பக்தி விசுவாசத்துடன் அன்பர்கள் தத்தம் காணிக்கைகளை எடுத்து அவர் கைவசம் செலுத்திவிடுவார்கள். நேர் முருகன் சன்னதியிலேயே செலுத்திவிட்டதாகவும் அவர்கள் எண்ணி மனநிறைவு கொள்வார்கள். தாராளமாகத் திரவியத்தை எடுத்துச் செலவு பண்ணுகிற வசதி அவருக்கு உண்டாயிற்று. காணிக்கைத் தொகைகளில் கடவுளுக்குச் சென்றது எவ்வளவு, அவர் கைவசம் நின்றுவிட்டது எவ்வளவு என்பது கடவுளுக்கும் அவருக்கும்தான் தெரியும்! மற்றவர்கள்

அதைப்பற்றிச் சந்தேகிக்கவும் கிடையாது. தெய்வத்தின் பெயரால் நிகழ்வதைச் சந்தேகிப்பதே பாபம் என்று கருது வதும் நம் நாட்டில் உண்டு.

முருகக் கடவுளுக்கு ஓர் ஊரில் ஆற்றங்கரையில் ஆலயம் ஒன்று கட்டுவிக்க வேண்டும் என்ற எண்ணம் குகதாசன் கருத்தில் குடிபுகுந்தது. நாள் ஏற ஏற, அது பேரலையாய் வடிவெடுத்தது. விரைவில் தொகை திரட்டுவதற்கு வழி என்னவென்ற சிந்தனையானது சித்தமிசை சர்வகாலமும் சுழன்று கொண்டிருந்தது. இன்றைக்கு ஒரு திட்டம்; இதற்கு நேர்மாறான மற்றொரு திட்டம் நாளைக்கு. இங்ஙனம் சஞ்சல உலகில் அவர் சஞ்சரித்து வந்தார். இதற்கிடையில் தவ வேடத்தின் வெளியாடம்பரம் கொஞ்சம் அதிகரித்தது. பொற்கம்பியில் தொடுத்த ருத்ராக்ஷம், வாசனை கூட்டிய வெண்ணீறு, மினுக்கெடுத்த தாமிரக் கமண்டலம், வெள்ளிப் பூண்பிடித்த பிரம்பு, அழகாகச் செதுக்கிய பாதக்குறடு— இவைகள் அவரிடத்துத் தென்பட்ட புதுமைகளாகும்.

தமிழ்நாட்டில் பிரசித்திபெற்ற பண்டிதர் ஒருவரைச் சந்திக்கக் குகதாசர் தீர்மானம் செய்தார். திவாகர பண் டிதர் என்ற மாற்றுப் பெயரை இவ்வரலாற்றுக்காகவென்று அவருக்கு வழங்குகிறோம். ஒருநாள் காலையில் தமது நித் திய வழிபாட்டை முடித்துக்கொண்டு திவாகர பண்டிதர் தமது வீட்டின் முகப்பில் வந்தமர்ந்தார். சிறிது நேரத்துக் குள் புத்தக ஆராய்ச்சியில் அவர் மூழ்கிவிட்டார். எதிரே வருகிறவர் யார், போகிறவர் யார் என்பதெல்லாம் அவருக் குப் புலப்படவில்லை. பாதக்குறடு பட் பட் என்று ஒலித்துக் கொண்டு பக்கத்தில் வந்து சடக்கென அதன் சத்தம் நின் றது. ஆனால், பண்டிதர் அதைப் பொருட்படுத்தவில்லை. அவரது மனது எண்ணவுலகில் தோய்ந்திருந்தது.

"முருகா!" என்ற பேரரவம்.

பண்டிதர் தலைநிமிர்ந்து மூக்குக் கண்ணாடியின் மேற் பகுதி மூலம் கூர்ந்து நோக்கினர். தவவேடம் தாங்கிய குகதாசரின் திருமேனி தரிசனம் கொடுத்து நின்றது. எழுந்து நின்று வந்தவரை ஒரு நாற்காலியின்மீது அமர்ந்திருக்கச் செய்து திவாகரர் தாமும் உட்கார்ந்தார்.

இருவருக்கும் இடையில் சிறிது நேரம் மௌனம்; பேச்சை, யார் எப்படித் துவக்குவதென்று அவர்களுக்கு விளங்கவில்லை.

"முருகா!" என்று ஓலமிட்டார் வந்தவர்.

"தாங்கள் இங்கு எழுந்தருளியதற்குக் காரணம் யாதோ?" எனப் பண்டிதர் வினயத்துடன் விண்ணப்பித்தார். குகதாசர் இயம்புவாராயினர்: "யாம் எம்பெருமான் முருகவேளுக்குத் திருக்கோவில் ஒன்று கட்டுவிக்கக் கருதியுள்ளோம். அதற்கேற்ற பொருளைத் திரட்டுவது எங்ஙனம் என்று பலநாள் கவலைப்பட்டிருந்தோம். நேற்றிரவு கலிகாலத்தில் கண்கண்ட தெய்வம் குமரக் கடவுள் என் கனவில் தோன்றினர். 'அன்பா! நீ அவதிப்படாதே, நம் தொண்டன் திவாகரனிடம் போ. நீ வேண்டுவதை அவன் விருப்புடன் செய்து வைப்பான்' என மொழிந்தருளி மறைந்தார். அடியேனும் அதன்படி உம்மிடம் வந்துள்ளேன்." பண்டிதர் செவி கொடுத்துக் கேட்டார். முகத்தில் ஒருவித மாறுதலும் உண்டாகவில்லை. இருவருக்குமிடையில் சிறிது நேரம் அமைதி குடிகொண்டது.

குகதாசர் உள்ளத்தில் பலவிதமான எண்ணங்கள் அலையெடுத்தன. பண்டிதரோ பேசாதிருந்தார். "என்ன சொல்லுகிறீர்?" என்று வந்து காத்திருந்தவர் வினவினர்.

"மிக நன்று!" என்று பதில் வந்தது. மீண்டும் மௌனம். குகதாசருக்கு ஒவ்வொரு கணமும் நெடுங்காலம் போன்று தென்பட்டது. மேலும் பொறுத்திருக்க அவருக்கு முடியவில்லை. "முடிவு ஒன்று சொல்லுங்கள்" என்றார். திவாகரர் குகதாசரை இப்பொழுது ஏறிட்டுப் பார்த்தார். பிந்தியவரின் முகம் சஞ்சலத்தோடு கீழ் நோக்கியது.

"எனக்கும் உத்தரவு வந்தவுடன் வேண்டியதைச் செய்து விடலாம்" என்றார் பண்டிதர்.

"யாரிடமிருந்து உத்தரவு?" என்று ஆவலுடன் குகதாசர் கேட்டார்.

"முருகனிடமிருந்து" என்றார் திவாகரர்.

"உங்களுக்கு உத்தரவு வருவதுண்டா?"

"அவசியமானவைகளுக்கு உத்தரவு வருவதுண்டு" என்று பண்டிதர் அழுத்தம் திருத்தமாக இயம்பினார்.

"இதற்கு உத்தரவு வராவிட்டாலோ?" என்று ஏங்கினார் குகதாசர்.

"சந்தேகம் கொள்வானேன்?" என்றார் பண்டிதர்.

"இப்பொழுது நான் செய்ய வேண்டியது யாது?" என்று மற்றவர் கேட்டார்.

"இரண்டு அல்லது மூன்று நாள் கழித்து வாருங்கள்" என்று விடை வந்தது.

குகதாசரும் மூன்று நாளைக்குப் பின் பண்டிதர் முன்னிலையில் தோன்றினார். ஆர்வம் ததும்பிய வரவேற்பு; உற்சாகம் ஊட்டக்கூடிய உரைகள்; வந்தவர் முகத்தில் இவை புதிய களையை உண்டு பண்ணின.

"எனக்கு உத்தரவு வந்து விட்டது!" என்று முந்திக் கொண்டார் பண்டிதர்.

"எம்பெருமான் என்ன உத்தரவிட்டிருக்கிறார்?" என்று ஆசையுடன் குகதாசர் கேட்டார். அவர் மனதில் கொண்டிருந்த எண்ணம் இப்பொழுது திரும்பவும் தெளிந்த வடிவெடுத்தது. திவாகரர் தீர்மானம் செய்தால் பிரபலமான தனவைசியர் பலரிடமிருந்து வேண்டியவாறு திரவியத்தைத் திரட்டி விடமுடியும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அவர் ஆவலுடன் எதிர்பார்த்து நின்றார்.

"வாருங்கள்" என்று பண்டிதர் தொண்டரை அழைத்துக்கொண்டு வெளியே புறப்பட்டார். நடந்து செல்லுகையில் பேச்சு ஒன்றும் நிகழவில்லை. தொண்டர் தம் உள்ளத்தில் தோன்றிய எண்ணங்கள் ஓதி ஒழியா. அவைகளையெல்லாம் இயம்புவதைவிட யூகிப்பது மேல். அவர்கள் சென்றவிடம் பணக்காரர் யாருடைய வீடுமல்ல. கடையுமல்ல. இடிந்துபோன பழைய கோட்டை ஒன்று. அதற்குப் பக்கத்தில் பட்டுப்போகும் தறுவாயில் இருந்த இச்சி மரங்கள் மூன்று நான்கு. அவைகளுக்கு இடையில் வட்டமான பள்ளமொன்று. அதில் விசித்திரமான மட்பாண்டங்கள் உடைந்து சிதறடைந்து கிடந்தன. பண்டிதர் அதனருகில் நின்றார்; இங்குமங்கும் திரும்பிப் பார்த்தார். குகதாசரிடம் அடங்கிய குரலில் இரகசியமாகப் பகர்ந்தார்: "முருகன் உத்தரவு; நாம் இருவரும் நடு இரவில் இங்குவந்து, யாருக்கும் தெரியாது இக்குழியில் நான்கு அடி வெட்டினால் மட்பாண்டங்கள் மூன்றிலிருந்து வேண்டிய அளவு பொன் காசுகள் எடுத்துக் கொள்ளலாம்" என்றார். பண்டிதரோ கிழவர்; குகதாசர் காளைப் பருவத்திலிருந்தார். மண்வெட்டும் வேலை யாருடையதாகும் என்பதை அவர் சற்று எண்ணிப்பார்த்தார். "பொன் அகப்படாவிட்டாலோ!" என்றார்.

"முருகன்மீது சந்தேகம் எதற்காக?" என்று பண்டிதர் வியப்புடன் வினவினர்.

"ஒரு வேளை......"

"அதற்கும் முருகன் உத்தரவு ஆகியிருக்கிறது" என்ற பதில் பண்டிதரிடமிருந்து வந்தது.

"என்ன உத்தரவு?" என்று குகதாசர் கவலையுடன் கேட்டார்.

"தாங்கள் இக்குழியில் நிஷ்டையில் உட்காரவேண்டியது; நான் மண்ணைப்போட்டு மூடிவிடவேண்டியது. பாக்கிக் காரியங்களை முருகனே பார்த்துக்கொள்வார்" என்றார் புன்னகைபூத்த பண்டிதர். குகதாசர் எரிச்சலுடன் கிழவரை ஏறிட்டுப் பார்த்தார்; சடக்கென்று திரும்பி, படக் படக் என்று பாதக்குறடு சத்தமிட நடந்து சென்று மறைந்தார். இது முருகன் அருளா?

---

# முருகன் அருளே

கொங்கு நாட்டில் குமரக்கடவுள் எழுந்தருளியுள்ள குன்றுகளில் ஒன்று சென்னிமலை. சுமார் பதினைந்து வருஷங் களுக்கு முன்பு நாங்கள் இருவர் முருகன் தரிசனத்துக்காக அங்கே சென்றிருந்தோம். அப்பொழுது சாது ஒருவரைச் சந்திக்க நேர்ந்தது. அவர் சொன்ன வரலாற்றைக் கூடிய வரையில் அவரது சொந்தச் சொல்லிலேயே இங்கே குறிப் பிடுகிறோம்.

"சுவாமீ, நாளைக் காலையில் நீங்கள் சிவமலைக்குப் போகிறீர்கள். வழியில், இந்தச் சென்னிமலையின் தென் சாரலில், இங்கிருந்து சுமார் இரண்டு மைல் தூரத்தில், சாலையோரத்தில் ஒரு சேந்துகிணறும் பிள்ளையார் கோயி லும் இருக்கின்றன. அந்த இடத்தில் வண்டியை நிறுத்த வண்டிக்காரனிடம் ஏற்பாடு செய்கிறேன். நீங்கள் அக் கிணற்றில் நீர் சேந்தி கை, கால் சுத்தி செய்து கணபதியை வழுத்துங்கள். ஆங்குச் சற்று அமர்ந்திருந்து கிணற்று நீர் பருகிவிட்டுப் போகவேண்டும். இது அடியேனது வேண்டு கோள்" என்றார். "அப்படியே செய்கிறோம். அக்கிணற் றைப்பற்றிய தனி விசேஷம் ஏதேனும் உண்டா?" என்று வினவினோம். அவர் முகத்தில் உற்சாகம் உருவெடுத்தது. புன்முறுவலோடு பேசத்தொடங்கினார்: "இதோ பாருங்கள்! இந்தப் பித்தளைக் கமண்டலத்தை நான் காசியிலிருந்து சில வருஷங்களுக்கு முன்பு வாங்கி வந்தேன். நல்ல முதுவேனிற்காலம். இக்கமண்டலம் என் அண்டையில் இருக்க, இம்மலையின் தென்சாரலில், சாலை மரத்தடியில் உட்கார்ந்து ஒருவருடன் பேசிக்கொண்டிருந்தேன். தெற்கே நெடுந்தூரத்துக்கு அப்பாலிருந்து ஓர் ஆள் ஆவலுடன் ஓடி

வருவதைக் கவனித்துக் கொண்டிருந்தேன். பக்கத்தில் வர வர அவன் கண்கள் கமண்டலத்தின் மீதிருப்பதைக் கவனித்தேன்.

'அப்பா, ஒருவாய் தண்ணீர்!' என்ருன் பதைபதைப் புடன். 'ஐயோ, வெறும் கமண்டலமே' என்று இதைத் தூக்கிக் குப்புறக் கவிழ்த்துக் காட்டினேன்.

'தாகத்தால் என் உயிர் போகிறது, என்று அவன் சோர்ந்து கீழே உட்கார்ந்தான். அக்காட்சி என் உள்ளத் தைப் பற்றிப் பிடித்தது. நினைத்துப் பார்த்தேன். சென்னி மலையிலிருந்து சுமார் மூன்று மைல் தூரத்துக்கு ஒரே மேட்டாங்காடு. கோடையில் கரணம் போட்டாலும் ஒரு கை தண்ணீர் கிடைக்காது. இங்கு மாளாத வெயிலில் மக்கள் வந்து மாட்டிக்கொண்டு அவதிப்படுகிருர்கள். இவ்விடத் தில் ஒரு கிணறு வெட்டாது நாம் வாழ்ந்திருந்தென்ன அல்லது மடிந்து போனுல்தான் என்ன என்று எண்ணினேன். இரவும் பகலும் அதே ஏக்கம். வெறும் மலையைப் பிடித்து வெட்டுவதில் பயன் என்ன? எந்த இடத்தில் நீர் கிடைக்கு மென்று யாருக்குத் தெரியும்? 'முருகா' என்று அவனை வழுத்திவிட்டுப் படுப்பேன். ஆனுல் தூக்கம் பிடிப்பதில்லை. கவலையால் பித்துப் பிடித்தவன் போன்று ஆகிவிட்டேன். ஓர் இரவின் பிற்பகுதியில் ஒரு கனவு. ஆனுல் அது நனவை விட நன்ருகத் தெளிந்த நிலை. குழந்தை வேலாயுதன் என் னிடம் வந்தான். 'நீ அந்த இடத்தில் ஒரு கிணறு வெட்டு' என்ருன். மலைச்சாரலில் நீர்க்கால் உள்ள இடம் எது என்று எனக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்டேன். குழந்தை வேலன் ஓடிப்போய் ஒணுன் கொடியைப் பிடுங்கிக் கோடு கட்டினுன். 'அதற்குள் பதினுறு முழம் தோண்டு; தெளிநீர் தென்படும்' என்ருன். புன்சிரிப்போடு என்னைப்

பார்த்துவிட்டு மறைந்தான்; திடுக்கிட்டு எழுந்திருந்தேன். உடல் வியர்த்தது. உள்ளத்தில் ஆவல் ஒருபுறம்; ஆர்வம் மற்ளுெரு புறம். விடியும் வரையில் நம்பிக்கையோடு காத்திருந்தேன். கிழக்கு வெளுக்க நானும் எழுந்து நடந்தேன். அந்த இடத்துக்கு அருகில் செல்லச் செல்ல என் மனம் பட்டபாட்டை என்னென்று சொல்லுவது! கனவில் கண்ட அதே இடத்தை அப்படியே நனவில் பொழுது புலரும் வேளையில் பார்த்தேன். பிடுங்கிய ஒணன்கொடியில் எல்லை கட்டப்பட்டிருந்தது."

இந்த வரலாற்றைக் கேட்கக் கேட்க, யோக சாதனத்தால் தூய மனதுக்கு வரும் வல்லமை யாது என்ற எண்ணம் மனதிற்கு வந்தது. அதை ஒருபுறம் ஒதுக்கிவைத்துவிட்டு அவர் பேச்சுக்கு மேலும் செவி சாய்த்தோம். அவர் மன மகிழ்ச்சியுடன் மொழிந்துகொண்டே போனர்.

"ஒணன் கொடியைக் கண்டதும், தண்ணீரே அகப்பட்டு விட்டதுபோன்ற ஆனந்தம் எனக்குண்டாயிற்று. அவ்விடத்திலேயே உட்கார்ந்துகொண்டேன். இனிச் செய்ய வேண்டியது என்னவென்று ஊக்கத்துடன் நினைத்துப் பார்த்தேன். எல்லாவற்றையும் ஓர்மைப்படுத்திக்கொண்டேன். திங்கட்கிழமைதோறும் முருகன் மலைப்படியில் யாசகத்துக்கு உட்கார்ந்து கொள்வேன். வாரத்துக்குச் சில அணுக்கள் அகப்படும். மண்வெட்டி, கூடை, கடப்பாரை, பிக்காசு ஆகியவைகளை முறையாக விலைக்கு வாங்கினேன். காலையிலும் மாலையிலும் அங்குலம் அங்குலமாகக் கிணறு வெட்டுவது என் வேலை. நிலா வெளிச்சம் இருந்த காலத்தில் இரவில் வேலை செய்வதுமுண்டு. மண்ணை வெட்டி வெளியே கொட்டிவிட்டு, மேலே வந்து அதை வாரித் தூர எடுத்துக் குவிப்பேன். கழுத்து ஆழத்துக்குக் கீழே போன

பிறகு மண்ணை வாங்கிக்கொட்ட, மாட்டுக்காரப் பையன்கள் துணையைத் தேடிக்கொண்டேன். அதற்காக அவர்களுக்குக் கைக்கூலியாகக் கடலை, பொரி வாங்கிக் கொடுத்துவந்தேன். சோமவார யாசகம் இதற்கெல்லாம் மூலதனமாய் வாய்த்தது.

" இப்படி மாதங்கள் சில கடந்து போய்விட்டன. ஆழம் பதினறு முழத்துக்குப் பக்கத்தில் வந்துவிட்டது. அப்படியிருந்தும் தண்ணீரின் அறிகுறி ஒன்றும் தென்படவில்லை; கவலைக்கு ஆளானேன். ஓர் இரவு நிலவு உச்சந்தலைக்குமேல் இருந்தபொழுது பாறைபோன்ற கெட்டியான மண்ணைப் பிக்காசால் குடைந்துகொண்டிருந்தேன். களைப்பு வந்து விட்டது; சோர்ந்து உட்கார்ந்தேன். சிந்தனைகள் பல உள்ளத்தில் உதித்தன. தாங்கமுடியாத துயரம் ததும்பிக்கொண்டு வந்தது. "முருகா, உன்னை நம்பி இந்த வேலையில் இறங்கி விட்டேன். உன் ஆணைப்படி பதினறு முழம் உயிரைப் பிடித்துக்கொண்டு வெட்டி விடுகிறேன். அதற்குள் தண்ணீர் தென்படாவிட்டால் இந்தக் குழியிலேயே விழுந்து செத்துப் போவேன்' என்று கதறி அழுதேன்."

இப்படி அவர் இயம்பிக்கொண்டு வந்தபொழுது பழைய உருக்கத்தின் அறிகுறி தானகத் தலையெடுத்தது. உள்ளக் கசிவு பக்தர்களுடைய தனிச் சிறப்பு. இந்தச் சாதுவின் பக்திநிலை எங்கள் உள்ளத்தில் பூரிப்பை உண்டுபண்ணியது.

" பதினறுவது முழத்தின் பெரும்பகுதியை வெட்டியாய் விட்டது. ஒரு மூலையில் கொஞ்சம் பாக்கி. ஓங்கிப் பிக்காசைப் பூமியில் நாட்ட, அது பொத்துக்கொண்டு உள்ளே பாய்ந்தது. குபுகுபுவென்று ததும்பிக்கொண்டு தண்ணீர் மேலே வந்தது. பிக்காசை ஒருபுறம் எறிந்துவிட்டு மண்டி போட்டு உட்கார்ந்துகொண்டு, தண்ணீரை அள்ளி அள்ளிக்

குடித்தேன். உள்ளே இருக்கிற ஆத்மாவுக்கு இப்படி முதல் அபிஷேகம் செய்தேன். கணபதிக்கு அபிஷேகம் முதலியன அதன்பிறகுதான்! மற்றச் சீரமைப்புகளெல்லாம் அதன் பின் வந்தன" என்று சொல்லி முடித்தார் அந்த முருக பக்தர். அக்கிணற்றையும் கணபதி கோயிலையும் இன்றைக்கும் காணலாம்.

---

# நரஸ்துதியும் பரஸ்துதியும்

உலகில் அரசராய் வந்துள்ளவர்களில் பெயரளவில் அரசர்கள் பலர்; இறைமையோடு கூடிய அரசர் சிலர். இறைமையும் தெய்வத் தன்மையும் ஒன்றல்லவா! இறைமையே வடிவெடுத்த இந்திய அரசர்களுள் ஒருவர் அக்பர். வெளிநாட்டினின்று படையெடுத்துவந்த மொகலாய வம்சத்தவர் எனினும் இந்தியப் பண்பாடும் அவரிடத்துப் பொலிந்திருந்தது. ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கு முதன்முதல் விதை விதைத்தவர் அக்பர் என்றால் மிகையாகாது. எழுதப் படிக்கத் தெரியாத பேரரசர் அவர். நெறிபிறழா நேர்மை அவரிடத்திருந்தது. தராசுத்தட்டு யாவர்க்கும் ஒரே பாங்கில் பொருளின் எடையைக் காட்டுவதுபோன்று, அக்பர் சக்கரவர்த்தியின் செங்கோல் ஜாதிமத வேற்றுமையின்றி நீதி செலுத்தி வந்தது.

இன்னிசையை இஸ்லாமிய மதத்தவர் இறைவன் வழிபாட்டுக்குத் துணைபுரிய வல்லதென்று ஏற்றுக்கொள்வதில்லை. சங்கீதம் வெறும் இகலோக சுகசம்பந்தமானதென்று கருதி அதைக் கடவுள் வழிபாட்டினின்று ஒதுக்கி வைத்துள்ளார்கள். மசூதிக்குப் பக்கத்தில் இசையின் ஆரவாரம் ஒன்றும் வரலாகாது. ஆனால் ஹிந்துக்களோ இன்னிசையை இறைவன் வழிபாட்டுக்கு நன்கு பயன்படுத்தி வந்துள்ளார்கள். சங்கீதம் என்னும் லலித கலாஞானமானது பாடகனைப் பரம்பொருளின் பக்கத்தில் கொண்டு சேர்க்க வல்லது என்பது அவர்களது கொள்கை. அக்பர் கோமானுக்கு இக்கோட்பாடு முற்றிலும் சம்மதம். அனுஷ்டானத்திலேயே அவர் அதை நன்கு நிரூபித்து வந்தார். இசைவன்மையோடு கடவுளைப் போற்றிப் பாடுவதை அவர் பிரீதியுடன் கேட்டு

வந்தார். ஓய்வு வேளையில் பெரும்பகுதி பக்தி ததும்பிய பாடல்கள் கேட்பதிலேயே கழிந்தது. மன அமைதி பெறுதற்கு அது ஒன்றே உற்ற உபாயமாய் இருந்து வந்தது.

சங்கீத வித்வான்களுக்குச் சிறந்ததொரு சந்தர்ப்பம் கிடைத்தது. டில்லி பாச்சாவினுடைய தர்பாரில் சென்று பாடிச் சன்மானம் பெற்று வரவேண்டும் என்று ஒவ்வோர் இசை வல்லானும் எண்ணி வந்தான். அப்படிப்பாடி வந்ததே பாடகர்களது பிரசித்திக்கும் கீர்த்திக்கும் முகாமையாயிற்று. அக்பரும் அவர்களுக்கு வேண்டியவாறு ஊக்கம் காட்டி வந்தார். பாடக் கேட்கும் போதெல்லாம் பாச்சாவுடைய மனது பரத்தின்பால் திரும்பிவிடும். செவியின் வாயிலாக சங்கீதம் என்னும் அருட்செல்வத்தை நுகர்ந்து தெய்வ சான்னித்தியத்துக்கு அவருடைய மனது சென்றுவிடும்.

அரசனிடத்திருந்த இப்பேரியல்பைப் பாடகர்கள் எல்லாரும் அறிந்தவர்கள் அல்லர். தங்களுடைய அவா நிறைவேறுவதற்காக அவர்கள் பெருமுயற்சி எடுத்துக்கொண்டனர். கண்பொத்திக் காதின் வாயிலாகக் கானம் பருகிய கோமான் இடையிடையே கடைக்கண் பார்வையை வித்வான்கள் மீது செலுத்துவார். தாம் கண்ட காட்சியை அவர் தமக்குள்ளே வைத்துக்கொள்வார். அந்நாளில் அவர் கண்ட காட்சியை இந்நாளில் நாம் காணலாம். ஏனென்றால் அவ்வுண்மைக் காட்சி காலத்தால் அடிபடுவதன்று. ஒவ்வொரு மனிதனது பாங்கையோ பரிபாகத்தையோ சில சம்பவங்கள் விளக்கி விடுகின்றன. பாட்டுப்பாடுவது அவைகளுள் ஒன்றாகும். பாடுகின்றவனுடைய பாங்கைப் பாடுகின்ற வேளையில் நாம் யார் வேண்டுமானாலும் படம் பிடித்து விடலாம்.

உணர்ச்சியற்றுத் தூங்குபவர் போன்று ஒரு பாடகர் தென்படுவார். பாதி விழிப்பில் இருப்பவர் போன்று இன்

றெருவர் காட்சி கொடுப்பார். அசட்டுத்தனம் ஒருவரிடம் தோன்றும் 'ஐயோ பாவம்! இத்தகைய பரிதாபகரமான நிலையில் இருக்கிருரே' என்று வேறு ஒருவரைப்பற்றி நினைவு வரும்.மரணவஸ்தையில் கண்விழிதெறித்துவிடுவது போன்று ஒருவர் குறுகுகிருர். பாடுகையில் அவயவங்களையெல்லாம் கசக்கிப் பிழிகிருர் ஒருவர். செவிடன் பார்த்தால் ஒரு பாடகர் அழுகிருர்; இன்னெருவர் சிரிக்கிருர்; மற்றெருவர் பகடி பண்ணுகிருர் என்று நினைப்பான். மனேதத்துவ ஆராய்ச்சிக்காரர் பார்த்தால் இவர் வீண் கர்வம் பிடித்தவர், இவர் முன்கோபி, இவர் ஸ்தோத்திரப் பிரியர் என்று சில பாடகர்களை வகைப்படுத்துவார். புன்முறுவல் பூத்து இனிமையான காட்சி கொடுப்பவரும், அமைதியே வடிவெடுத்தவரும் சிலர் அவர்களுக்கிடையில் உண்டு. பாடகர்களுக்கிடையில் இத்தனை விதப் பாங்குடையவர்களைப் பார்க்கலாம்.

அக்பரிடம் அப்போதைக்கப்போது வந்த பாடகர்கள் பலர்; நிரந்தரமாக அவரிடமே இருந்த ஆஸ்தான வித்வான்கள் சிலர். ஆஸ்தான வித்வான்களுள் தான்சேனர் என்பவர் மிக முக்கியமானவர். அவரைப் பற்றிய வரலாறு ஒன்று கவனிக்கத்தக்கது. தான்சேனர் இளம் வயதில் பழத்தோட்டம் ஒன்றுக்குக் காவலிருந்து வந்தார். அத்தோட்டத்துக்குள் தெரிந்தோ தெரியாமலோ வந்தவர்களை விரட்டுதற்கு அவர் நூதனமான முறையொன்றைக் கையாண்டு வந்தார். புதருக்குள் மறைந்திருந்துகொண்டு சிங்கம்போன்று அவர் கர்ஜிப்பார். அத்துமீறி வந்தவர் அதைக் கேட்டதும் அரண்டு ஓடிவிடுவார். யாரோ மேதாவி ஒருவர் ஒருநாள் அத்தோட்டத்துக்குள் வந்து ஒரு மரத்தடியில் ஆயாசத்துடன் அமர்ந்தார். சிறிது நேரத்துக்குள் சிங்கம் கர்ஜித்தது. பெரியவர் அதைப் பொருள்படுத்தாது தமது எண்ணத்தில்

ஆழ்ந்திருந்தார். வாலிபன் வியப்புடன் அவர் அருகில் வந்து சிங்கத்தின் கர்ஜனைக்கு அவர் அஞ்சாததற்குக் காரணம் யாதோவென்று வினவினன். "இளையோய், நீ அஞ்சாத சிங்கத்தைக் குறித்து நான் ஏன் அஞ்சவேண்டும்!" என்ற பதில் வந்தது.

"நான்தான் சிங்கம் போன்று சத்தமிட்டது" என்றான் இளைஞன். "அப்படியானால் நீ தான்சேனன்" என்றார் அப் பெரியவர். தான்சேனன் என்பது சிம்மராகம் பாடுபவன் என்று பொருள்படுகிறது. அன்று முதல் தான்சேனர் என்ற காரணப் பெயர் அவருக்கு வந்தது.

அக்பர் கோமானுக்கும் தான்சேனருக்கும் நெருங்கிய நட்பு. அரசனும் குடியும் என்ற வேற்றுமையில்லை. காவலனுக்கும் பாவலனுக்கும் உள்ளது மேற்பூசலான தொடர்பு மல்ல. பாரமார்த்திக வாழ்வு என்ற மேலான இலட்சியம் அவர்களை ஒன்று சேர்த்து வைத்தது. அரச கடமைகளினின்று அக்பருக்கு ஓய்வு கிடைக்கும் வேளைகளில் மேலான கருத்துக்களிலும் வாழ்க்கை விதிகளிலும் இருவரும் அளவளாவிப் பொழுது போக்குவர். பக்தி ததும்பிய பாடல்களைத் தான்சேனர் அப்போதைக்கப்போது பாடுவார்; அரசன் அதைச் செவிமடுத்து ரசிப்பார். இவ்விதம் அவர்கள் சத்காலக்ஷேபம் செய்து வந்தார்கள். ஒருநாள் அப்பாடகர் பாடிய பாட்டில் அலாதியாக பாவமும் ரசமும் நிறைந்திருந்தது. அதைக் கேட்ட கோமான் மிகவும் மெச்சினர். ஆனால் தான்சேனரோ ஏதோ எண்ணத்தில் ஆழ்ந்திருந்தார். தமது பாராட்டுதலைப்பொருள்படுத்தாதது ஏனோவென்றுபாராளும் வேந்தன் வினவினர்.

"கோவே, நான் பாடுவதைக் கேட்டு இங்ஙனம் களிப்புறுகின்றீர்கள். என் குருநாதர் பாடுவதைக் கேட்டால்

என் செய்வீர்கள் என்று திகைத்து நிற்கிறேன்'' என்ருர் ஆஸ்தான வித்வான்.

"அப்படியானல் அதை நாம் ஏன் கேட்கலாகாது?" என்று அதிசயித்தார் அக்பர்.

"வேந்தே, நான் எண்ணுகிறபடி அது எளிதில் அமை யாது'' என்ற ஐயம் விடையாக வந்தது.

அக்பர்: உமது குரு எங்கிருந்தாலும் அவரை அழைத்துவர ஏற்பாடு செய்யலாமே.

தான்சேனர்: யாருடைய அழைப்புக்கும் அவர் இணங்கு பவர் அல்லர்.

அக்பர்: டில்லி பாச்சாவுடைய உத்தரவு என்று சொல்லி யனுப்பினுலோ?

தான்சேனர்: அவர் முற்றத் துறந்த முனிவர். மண்ணுளும் மன்னனது ஆணையை முன்னிட்டும் அவர் இடம் விட்டு நகரமாட்டார்.

அக்பர்: அப்படியானல் நாம் நேரில் சென்று பாடக் கேட்டாலோ! வேந்தனுக்கும் வணங்காத அத்துறவி எங்கிருக்கிருர்?

தான்சேனர்: டில்லிக்குப் பக்கத்தில்தான், யமுனை நதிக் கரையோரம் வாசம் செய்கிருர். சர்வகாலமும் அவர் அந்தர்முக திருஷ்டியில் இருக்கிருர். பிறர் வேண்டு தலுக்காக அவர் பாடுபவர் அல்லர். மேலும் மாட்சிமை தங்கிய தங்கள் அரசகோலம் மற்ருேர் இடைஞ்சலாகும்.

அக்பர்: அப்படியானல் பாமரர் உடையில் பாமரர் போன்று அவர் பக்கத்தில் போவோம். பெரியாரை நாடுவதில் நமக்கும் பரம விருப்பம்.

சிஷ்யர் தான்சேனர் ஒருநாள் தமது குருவின் ஆச்ரமத்துக்கு வந்து சேர்கிறுர். யாருக்கும் அடையாளம் தெரியாத வேற்றுர் ஒருவர் அவருடன் வந்திருக்கிறுர். அவர்கள் வந்தவேளை வாய்ப்பேச்சு எழுப்புதற்கு ஏற்றதன்று. வார்த்த விக்கிரகம் போன்று முனிவர் ஆழ்ந்து தியானத்திலிருக்கிறுர். அவரது உள்ளத்தைப் போன்று ஆச்ரம ஸ்தானத்திலும் அமைதி குடிகொள்கிறது. வியவகாரம் நிறைந்த உலகத்தினின்று வந்திருக்கும் இருவருக்கும் இது நல்லதோர் அருள்விருந்து. அவர்களும் அமைதியாக அமர்ந்து ஆனந்தத்தில் திளைத்திருக்கிறுர்கள். அதை வேண்டியவாறு பருகியபின் தாங்கள் எண்ணி வந்த காரியத்தின் நினைவு வருகிறது. ஆனுல் யாருடைய தியானத்தையும் கலைப்பது முறையன்று; பின்பு குருவினுடைய தியானத்தைச் சிஷ்யனைவன் கலைப்பது ஒவ்வுமா?

தான்சேனர் சூழ்ச்சியொன்று செய்தார். குருவின் நிஷ்டையைக் கலைத்த குற்றம் தன்மீது வந்துவிடலாகாது. அவர் நிஷ்டை கலைந்து நல்ல பாடல்களில் ஈடுபட்டும் ஆகவேண்டும். அதற்காகத் தான்சேனர் தாமே அடங்கிய குரலில் குருவணக்கம் பாட ஆரம்பித்தார். தாம் பாடிய பாட்டை ஆலாபனம் பண்ணினுர். இடையிடையே வேண்டுமென்றே சிறு சிறு தவறுதல்கள் செய்து விடுவார். சங்கீத வித்வான் ஒருவருக்குச் சங்கீதத்தில் தவறுகள் செய்துவிடுவது பெரிய சித்திரவதை செய்வது போன்றிருக்கும். இங்கு சிஷ்யன் பாடியது தம் மண்டையைப் பிளப்பதுபோன்று குரு உணர்ந்தார். தியானம் தானே கலைந்தது.

குரு கண் விழித்துப் பார்த்து ஒரு புன்முறுவல் பூத்தார். சிஷ்யன் செய்த குற்றத்துக்காக அவர் எடுத்துக்கொண்ட நடவடிக்கை அவ்வளவே. சான்றேர்க்கு அதில் குற்றம்

சாட்டுதல் வேண்டியவாறு உளது. தமது குற்றத்தைத் தலை வணங்கி ஏற்றுக்கொண்டு சிஷ்யர் தம்புராவை குருவின் முன்னிலையில் வைத்தார். அக்கணமே அவரும் அதை எடுத்து மீட்டிக்கொண்டு கானலோகத்தில் பிரவேசித்தார். லலித கலா (fine art) என்பதற்கு விளக்கம் அம்முனிவரிட மிருந்து வருகிறது. அவர் தம்புராவை மீட்டுவதில் ஒரு மகிமை, உடல் அசைவற்றிருப்பதில் ஓர் அழகு, கைவிரல் களில் வடிவெடுக்கும் முத்திரைகளும் அபிநயங்களும் மேலாம் கருத்துக்களின் விளக்கங்களாகின்றன. முகவிலா சத்தில் மலரும் மகிழ்வு மண்ணுலகை மயக்கும்படி செய் கிறது. காவியமும் ஓவியமும், இசையும் விகசிப்பும் ஒன்றுக் கொன்று துணைபுரிகின்றன; ஒன்றையொன்று விளக்குகின் றன. காலம் கடந்தோடுவது கருத்தில் படிவதில்லை. எந்த இடத்தில் யாருடன் இருக்கிறோம் என்ற எண்ணமும் மனதில் வருவதில்லை. பாடுபவரும் பாடக் கேட்பவரும் பாட்டினில் சொக்கி விடுகின்றனர். இரண்டறக் கலத்தல் என்ற நிலையை கானம் காட்டிக் கொடுக்கிறது. தான்சேனருடன் வேற்றுராக வந்திருக்கும் வேந்தன் பிரபஞ்சத்துக்கு அப்பாலுள்ள பரமானந்த நிலையைச் சிறிது எட்டிப் பார்த்தவர் ஆய்விடு கிறார். இந்த ஒரு நிகழ்ச்சியை நுகர்தற்பொருட்டு மானுடப் பிறவியை எத்தனை தடவை வேண்டுமானாலும் எடுக்கலாம் என்று அவர் பேரார்வம் கொள்கிறார்..

இசை ரசிகராகிய டில்லி பாச்சாவும் இசை வல்லா ராகிய தான்சேனும் திரும்பவும் தங்களுக்கு விருப்பமான பொழுதுபோக்கில் அமர்கிறார்கள். அண்மையில் ஆச்ரமத் தில் அனுபவித்த ஆனந்தம் இருவர் மனதிலும் இன்னும் இனிது குடிகொண்டிருக்கிறது, ஒருவிதம் அல்லாவிட்டால் ஒரு விதத்தில் பேச்செல்லாம் யமுனாதீரவாசியாகிய யோகே

சுவருடைய இசை வன்மையைப் பற்றியதேயாம். அவர் பாடிய அதே பாடல்களை அதே ராகங்களில் அதே பாவத்துடன் பாடக்கேட்க வேண்டுமென்று அக்பர் விரும்பினர். தான்சேனருக்கும் அவ்வேளையில் அதற்கேற்ற உற்சாகம் இருந்தது. இசையுலகில் மூழ்கினர்; இனிது பாடினர்; கேட்பதற்கும் கம்பீரமாயிருந்தது. கண்மூடி அதில் லயமடைந்திருந்த கோமான் கண்விழித்துப் பார்த்தார். பிறகு தாம் கண்ட குறைவுக்கு அறிகுறியாகக் கையை விரித்துவிட்டார்.

அரசன்: ஆங்கு நான் பெற்ற ஆனந்தத்தில் ஒரு சிறுபகுதியையாவது ஈண்டு நான் பெறவில்லையே!

தான்சேனர்: வேந்தே, அதில் வியப்பென்ன உளது? நரஸ்துதிக்கும் பரஸ்துதிக்கும் உள்ள வித்தியாசம் அதுவே.

அரசன்: நீர் பகர்வது எனக்குப் புரியவில்லை.

தான்சேனர்: மனிதனிடத்து ஒருவிதமான மேன்மையும் இல்லை. எல்லா மேன்மையும் கடவுளிடத்திருக்கிறது. கடவுள் மூலப்பொருள். மனிதனும் மற்ற உயிர்களும் கடவுளின் பிம்பம். பிம்பமாகிய மனிதனுக்கு மதிப்புக் கொடுப்பது நரஸ்துதி; கடவுளுக்கு மதிப்புக் கொடுப்பது பரஸ்துதி.

அக்பர்: நம் ஆஸ்தானத்தில் எந்த மனிதனையும் குறித்துப் புகழ்ந்து பாடுதற்கு இடமில்லையே. எல்லாப் பாடகர்களும் பரம்பொருளைப் பற்றியே பாடியாக வேண்டும் என்பதுதானே நிபந்தனை?

தான்சேனர்: மன்னா, தாம் மொழிவது முற்றிலும் மெய். பாடல்களெல்லாம் பரம்பொருளைப் பற்றியவைகளே. மற்று, மனது எதைப் பற்றி நிற்கிறது என்பது கேள்வி.

நான் வாய்விட்டுப் பாடுவது பரம்பொருளைப்பற்றி; மனதுக்குள் எண்ணுவது அக்பர் சக்கரவர்த்தியின் அகமகிழ்ச்சியைப்பற்றி. அரசன், ஆண்டி என்ற வேற்றுமைகளையெல்லாம் கடந்து நிற்கும் அம் மஹாபுருஷரோ அண்ட நாயகனது ஆராதனைக்காகப் பாடுகிறார். அதற்கும் இதற்கும் உள்ள வேற்றுமை அதுவே.



# தெய்வத்தின் பித்தலாட்டம்?

பல ஆண்டுகளுக்கு முன்பு பம்பாய் நகரில் சிவப்பிரசாதர் என்ற திருத்தொண்டர் ஒருவர் இருந்தார். அவர் நவீன முறையில் கல்விபயின்றவர். ஆனால் கல்லூரிப் பட்டம் பெறுவதற்கு முன்பே அதில் ஏதோ வெறுப்புத் தட்டிப் படிப்பை நிறுத்திவிட்டார். அவர் வாழ விரும்பிய வாழ்க்கைக்கும் கற்றுவந்த கல்விக்கும் ஒருவிதமான தொடர்புமில்லையென்று அவர் முடிவு கட்டினர். அதுவே அவர் கல்லூரியை விட்டு விலகியதற்குக் காரணமாயிற்று. தமது ஜீவிதம் ஏழைகளுக்குப் பயன்படவேண்டும். கடவுள் ஏழைகளுடைய பங்காளன். ஏழைகளுடைய பணிவிடையே இறைவனது ஆராதனை. குடும்ப பாரம் என்ற சுமை தமது சேவைக்கு இடைஞ்சலாக வந்து நிற்கலாகாது. நைஷ்டிக பிரம்மசரியம் ஒன்றே வீண் தொல்லைகளைத் தொலைப்பதற்கு உற்ற உபாயம். இவை யாவும் அவருடைய தேர்ந்த கொள்கைகளாகும். அக்கொள்கைகளுக்கு ஏற்ப அவர் தூய எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார். ஆடம்பரத்தையும் விளம்பரத்தையும் அவர் அறவே வெறுத்தார்.

பம்பாய் நகரத்தின் எல்லைப் புறத்தில் சாந்தாகுருஸ் என்னும் ரயில்வே ஸ்டேஷனுக்கு அண்மையில் அவரது உபயோகத்துக்கு இலவசமாக ஒரு வீடு கிடைத்தது. வாடகையில்லா வீட்டை ஆங்கு யாரும் கனவிலும் கருத முடியாது. இடம், பொருள், ஏவல், காலம் எல்லாம் பணத்தைக் கொண்டு மதிக்கப்படுவதுதான் இயல்பு. சிவப்பிரசாதருக்குப் பணச் செலவில்லாது வீடு கிடைத்தது எதிர்பாராத செயல். ஆனால் அவர் தமது சொந்த வாசத்துக்கு அக்கட்டடத்தை வேண்டவில்லை. ஐந்தாறு அநாதைப் பிள்ளைகளை

வைத்துக்கொண்டு அவர்களுக்கு உணவும், கல்வியும், நல் வாழ்க்கைப் பயிற்சியும் வழங்க அவர் விரும்பினர். அத் தகைய விருப்பம் எல்லார்க்கும் வந்தமையாது. மனபரிபாகத் துக்கு அதுவே அறிகுறியாகும். கடவுள் வழிபாட்டில் அது உயர்ந்ததோர் இடம்பெறுகிறது.

சிவப்பிரசாதர் நிறுவிய மாணவர் விடுதி மிகச்சிறியது. 'சிறுகக்கட்டிப் பெருகவாழ்' என்னும் கோட்பாட்டுக்கு உட் பட்டது அவரது திட்டம். எண்ணிக்கையில் கைவிரல்கள் போன்ற அநாதைச் சிறுவர்களுக்கு அவரே தந்தை, அவரே தாய், யாவும் அவரே. உலகில் வேறு துணையொன்றும் அறியாத சிறுவர்களை அவர் உள்ளன்போடு நேசித்தார். அன்பு ஒன்றே அவர்களைப் பிணித்து வைத்திருந்தது. மெய்யன்புடையார்க்கு மேலும் வேண்டியது யாது?

அதிகாலையில் அவர்கள் உற்சாகத்துடன் படுக்கையை விட்டு எழுந்திருப்பார்கள். காலைக்கடன் முடிந்தவுடன் கடவுள் வழிபாடு நடைபெறும். அவரவர் எடுத்துக்கொண்ட இல்லப்பணியில் பிறகு பிரவேசிப்பார்கள். வீடு கூட்டுதல், பாத்திரம் துலக்குதல், துணி துவைத்தல், உணவு சமைத் தல் ஆகிய யாவும் விளையாட்டுப் போன்று முடிந்துவிடும். பிள்ளைகள் பாடம் படிக்கும் வேளையில் பராமரிப்பாளர் தியா னத்தில் அமர்ந்திருப்பார். குறித்த வேளையில் எல்லாரும் வட்டமாக அமர்ந்து உணவு உண்பர். மத்தியான உணவுக் குக் கையில் சிறிது உணவு எடுத்துக்கொண்டு பிள்ளைகள் பின்பு பள்ளிக்குப் போய்விடுவர். சிவப்பிரசாதர் மட்டும் மேலும் இரண்டொரு மணிநேரம் விடுதியில் தங்கியிருப்பார். நல்ல புத்தகங்கள் வாசிப்பதற்கென்று அவ்வேளை ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. சுமார் பதினேரு மணிக்கு மத்தியான உணவு அருந்திவிட்டு அவரும் வெளியில் போய்விடுவார்.

மாலை ஐந்து மணி வரையில் விடுதி பூட்டி வைக்கப்பட்டிருக்கும். திரும்பவும் அவர்கள் மகிழ்வுடன் கூடிச் சிற்றுண்டி அருந்துவார்கள். தாங்கள் வைத்திருந்த காய்கறித் தோட்டத்தில் சுமார் அரைமணி நேரம் உற்சாகத்துடன் வேலை நடக்கும். எளிய நல்லுணவை நவீன முறையில் சிரமமின்றி விரைவில் சமைப்பது அடுத்த செயலாகும். மாலைப் பிரார்த்தனையும், படிப்பும், அதன்பின் வரும் அந்தி உணவும் அருந்திய பின் அவர்கள் உரையாடுவது இவையாவற்றிலும் சிறந்தது. மாடியில் திறந்த பகுதியில் அவர்கள் விருப்பம் போன்று அமர்ந்துகொண்டும், சாய்ந்துகொண்டும், கால் நீட்டிப் படுத்துக்கொண்டும் இருப்பார்கள். தலைக்குமேல் எல்லை காணாத நட்சத்திர மண்டலம். பேச்சோ விதவிதமான பொருள்களைப் பற்றியது. சிவப்பிரசாதர் அவர்களுக்கு ஊட்டிய பொது அறிவு பள்ளிக்கூடம் எதிலும் அகப்படாதது. அல்லும் பகலும் பணத்துக்காகப் பரிதவிக்கும் பம்பாய் நகரில் இச்சிறிய குருகுலம் சாந்தியே வடிவெடுத்ததாக, தூய வாழ்வுக்கு உறைவிடமாக, பொருளாசை என்ற பறவையால் கொத்தப் படாத கனியாக வாழ்ந்து வந்தது.

பின்பு, இச்சிறு அநாதை ஆச்ரமத்துக்கு உணவுப் பொருள்தான் எப்படிக் கிடைத்தது என்ற கேள்வி எழலாம். சிவப்பிரசாதர் நாள்தோறும் சில மணி நேரம் பம்பாய் நகரினில் சுற்றித் திரிந்தது அதன் பொருட்டேயாம். பொருள் படைத்த பல பிரமுகர்களை அவர் மாதந்தோறும் முறையாகச் சென்று பார்ப்பார். சந்தாவாக அவர்களிடமிருந்து வந்த செல்வத்தைக் கொண்டு அவர் ஆச்ரமத்தைப் பராமரித்து வந்தார். அவர் நிதி திரட்டியதிலும் நேர்மையொன்று நிலை பெற்றிருந்தது. பொது நன்மைக்காகவென்று பொருள் சேகரிப்பவர் உள்ளத்தினின்று அகங்காரம், ஆணவம், ஐயம்

முதலிய மாசுகள் அகன்றுபோய் விடுகின்றன. மற்றவர் நலத்தைக் கருதிக்கருதி ஒருவன் தன்னை மறக்குமளவு மேன்மையுறுகின்றான். பிறர் நலத்தைப்பற்றிக் கருத நேர மில்லாத பொருளாளர்கள் பலர் இருக்கின்றனர். பணம் வேண்டுமென்று அத்தகையவர்களிடம் பொதுநலத் தொண் டன் ஒருவன் போய்க் கேட்கிறான். அவன் வந்து கேட்ட தற்காக இல்லையென்று மறுக்காது ஏதோ கொஞ்சம் செல் வம் எடுத்து வழங்குகிறார்கள். அப்படி வழங்குவது அவர்கள் செய்யும் அறச்செயலாகும். பரந்த எண்ணமில்லாதவர் உள்ளத்திலும் சிறிது பரந்த எண்ணத்தை ஊட்டுபவன் பொதுநலத் தொண்டன் ஒருவன். சிவப்பிரசாதர் இக்கோட் பாட்டையெல்லாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டே அந்த அரும்பணியில் அங்ஙனம் ஈடுபட்டிருந்தார்.

எத்தனைவித மனப்பாங்குடையவர்களையெல்லாம் சிவப் பிரசாதர் சந்தித்து வந்தார் என்பது அவருக்குத்தான் தெரியும். அவருக்குப் பொருளுதவி செய்துவந்தவர்களுள் கங்காதர சேட் என்பவர் ஒருவர். மாதத்திற்கு ஐந்து ரூபாய் அவர் அந்த அநாதைஆச்ரமத்தின் பராமரிப்புக்குக் கொடுத்து வந்தார். செல்வம் மிகப்படைத்தவர் அவர். ஆனால் அவர் கையைவிட்டுப் பணம் நன்கொடையாக எளிதில் வெளியில் போய்விடாது. மாதந்தோறும் மூன்று அல்லது நான்கு தடவை சிவப்பிரசாதர் அவரிடம் அதன் பொருட்டு அணுக வேண்டியதாகும். வந்தவரிடம் அந்த வியாபாரி வாய் வேதாந்தம் ஏராளமாகப்பேசுவார். தாம்விஷயம் மிகத்தெரிந் தவர் என்று மற்றவர்களிடம் தம்மை விளம்பரம் பண்ணிக் கொள்ளுதலில் அவருக்கு அதிக விருப்பம். கையைவிட்டுச் செல்வம் அதிகம் செலவாகாது கொடையாளியென்ற பெய ரையும் தேடிக்கொள்வார். சிலருக்கு உயிரிலும் பெரியது

செல்வம். ஸ்ரீமான் கங்காதர சேட் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர். சம்பாதித்த பணத்தை எண்ணிவைத்து அதைக் கண்குளிரப் பார்த்துப்பரமானந்தமடைவார். அதிகலாபத்துக் காகப் பகீரதப் பிரயத்தனம் எடுத்துக்கொள்வார். லாபத்தை எதிர்பார்த்து எதை வேண்டுமானாலும் ஈடு வைப்பார்.

பம்பாய் நகரில் மலபார்ஹில் என்னும் பகுதியொன்று உண்டு. ஆங்குச் சிறிய சிவாலயம் ஒன்று இருக்கிறது. சக்தி சமேதராய் சிவனும் அவருக்கு இடது பக்கம் முருக வேளும் வலதுபக்கம் கணபதியும் அக்கோயிலின்கண் எழுந் தருளியுள்ளார்கள். நித்திய நைமித்திக வழிபாடு ஆங்கு முறையாக நிகழ்ந்து வந்தது. அநாதை ஆச்ரமத்தை நிர் வகித்துவந்த தொண்டர் சிவப்பிரசாதருக்கு சமயம் வாய்த்த போதெல்லாம் அவர் அச்சிவாலயத்துக்குச் சென்று தொழுது வந்தார். ஆலயத்துக்குள் இருக்கும்போது அவர் யாருடனும் பேசமாட்டார். சந்நிதியில் நின்று மனமார வழுத்திவிட்டு ஒரு மூலையில் போய் அமைதியாக அமர்ந்துகொள்வார். பிறகு எழுந்து புன்முறுவல் பூத்தவராய் வெளியில் போய் விடுவார். ஏதோ சில வேளைகளில் வர்த்தகர் கங்காதர சேட்டும் பக்தர் சிவப்பிரசாதரும் இவ்வாலயத்துக்குள் ஒருவரையொருவர் சந்திப்பார்கள். ஆனால் பேச்சு வார்த் தைக்கு ஒருவர் இடங்கொடாவிட்டால் மற்றவர் என்ன செய்ய முடியும்? வியாபாரியானவர் நெற்றிநிறைய நீறுபூசி வருவார்; உரக்கப்பாடுவார்; முணுமுணுப்பார்; செல்வம் வளர வேண்டுமென்று சிவனிடம் வேண்டிக்கொள்வார்; சலசலவென்று சில்லறைக் காசுகளை உண்டியல் பெட்டியில் போடுவார்; பிறகு படாடோபத்துடன் போய்விடுவார்.

அந்திவேளை வருவதற்கு முன்பே சிவப்பிரசாதர்பம்பாய் நகரில் கவனிக்கவேண்டிய அலுவல்களை முடித்துக்கொண்டு

ஆச்ரமத்துக்குத் திரும்பிவிடுவது வழக்கம். இருட்டிப் போன பின்பு அவர் வீடுவந்து சேர்ந்த நாட்கள் வருஷத்தில் இரண்டு அல்லது மூன்றுக்குமேல் இருக்கமாட்டா. தெய்வாதீனமாக சிவப்பிரசாதர் ஒரு நாள் நகரத்துக்குள் அதிக நேரம் இருக்கவேண்டியதாயிற்று. இரவு பத்து மணிக்கு மலபார் ஹில்லில் இருந்த சிவாலயத்தை மூடுவது வழக்கம். இரவு ஒன்பதரை மணிக்குச் சிவப்பிரசாதர் ஆங்கு தரிசனத்துக்குச் சென்றிருந்தார். எதிர்பாராதபடி அதே வேளையில் கங்காதர சேட் அவர்களும் அங்கு வந்திருந்தார். ஆலயத்துக்குள் இருந்த மங்கிய வெளிச்சத்தில் ஒருவரையொருவர் அடையாளம் தெரிந்துகொண்டனர். வழக்கம்போன்று சிவப்பிரசாதர் பேச்சுக்கு இடங்கொடுக்கவில்லை.

பக்திப் பரவசமடைந்தவராய்ச் சிவப்பிரசாதர் வீழ்ந்து வணங்கிவிட்டு எழுந்து போனர். அக்காட்சி கங்காதர சேட்டின் உள்ளத்தில் ஒரு புதிய உணர்ச்சியை உண்டு பண்ணியது. ஆலயத்தின்கண் எழுந்தருளியுள்ள எம்பெருமான் ஏதோ பேசுவது போன்று அவர் உணர்ந்தார். காதுகொடுத்து அதைக் கவனித்துக் கேட்க அவர் ஒருப்பட்டார். அசரீரியாகக் கீழ்வரும் சம்பாஷணை நிகழ்கிறது:

“குழந்தைவேலா, நம் பக்தன் சிவப்பிரசாதனுக்குப் பொருளைப்பற்றிய குறையில்லாத நிலையை நாளைக்கு நீ நிறைவேற்றி வைக்கவேண்டும்.”

“தந்தையே, நான் செய்யக்கடவது யாது?”

“சேயோய், நீ செய்யக்கடவது ஒன்று உண்டு. நாளைக்கே நம் பக்தனுக்கு ஒரு லட்சம் ரூபாய் திரட்டிக் கொடுத்தாக வேண்டும்.”

“அங்ஙனமே ஆகுக, அண்ணலே!”

இந்தச் சம்பாஷணை சந்தேகத்துக்கு இடமில்லாவண்ணம் கங்காதர சேட் காதில் வீழ்ந்தது. அவர் வீட்டுக்குத் திரும்பினர். தாம் சாப்பிட்டது, படுக்கையில் சாய்ந்தது ஒன்றும் அவர் ஞாபகத்தில் இல்லை. தூக்கமும் தூரப் போய்விட்டது. 'ஒரே நாளில் ஒருலட்சம் ரூபாயா? சாது ஒருவருக்கு அவ்வளவு செல்வம் எதற்கு? பொருளைப்பற்றிய குறையில்லாத நிலையைத்தானே சேயோன் செய்துவைக்க வேண்டும்! அப்பொறுப்பில் நானும் கொஞ்சம் பங்கு எடுத்துக்கொள்கிறேன். கடவுள் கிருபையால் நமக்கும் ஏதோ கொஞ்சம் நன்மை ஏற்படட்டும்.' இவ்விதம் வியாபாரி தீர்மானித்துவிட்டார். வியாபார புத்தியானது மற்ற எண்ணங்களையெல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டது. விடிகளை எண்ணியெண்ணி இரவைக் கழித்தார் கங்காதரசேட். அதிகாலையில் எழுந்திருந்து அனுஷ்டானங்களை அவசர அவசரமாக முடித்துக்கொண்டு, அநாதை ஆச்ரமம் இருக்குமிடமாகிய சாந்தா குருஸ் போய்ச் சேர்ந்தார்.

சிவப்பிரசாதர் சிந்தித்தறியாத சம்பவம். காலையில் கங்காதரசேட் தாமே கிளம்பி வந்துவிட்டார்! வந்தவர் முன்னுரையை விரைவில் முடித்துக்கொண்டு நேர் விஷயத்துக்கு வந்துவிட்டார்: "நான் உங்கள் ஆச்ரமத்துக்கு ஏதாவதொரு நன்கொடையளிக்க வேண்டுமென்று நெடுநாளாய் நினைத்திருந்தேன். இன்று நல்ல நாள். என் எண்ணத்தை இன்று நிறைவேற்றுகிறேன். நீங்களும் அதற்கு இசைய வேண்டும்."

சிவப்பிரசாதர்: நான் செய்யவேண்டியது யாது?

சேட்ஜி: உங்களுக்கு இப்பொழுது நான் ஐம்பதினாயிரம் ரூபாய் ரொக்கமாகச் செலுத்திவிடுகிறேன். நீங்கள்

அதை மகிழ்வுடன் ஏற்றுக்கொள்ள வேண்டும். மற்று, நீங்கள் எனக்கு ஒரு சிறிய உபகாரம் செய்யவேண்டும். இன்று பகலெல்லாம் உங்களுக்கு என்ன தொகை வசூலாகிறதோ, அதைச் சிவ சந்நிதியில் கொண்டுவந்து எனக்குக் கொடுத்துவிடவேண்டும்.

சிவப்பிரசாதர் : இதென்ன விந்தை! ஒரு நாளெல்லாம் அலைந்தால் எனக்கு ஒரு நூறு ரூபாய் சேர்வது துர்லபம். அந்த அற்பத்தொகைக்காக நீங்கள் ஏன் அரை லட்ச ரூபாய் எனக்குத் தரவேண்டும்? இத்தகைய பேரம் எனக்குப் பிடிக்கவில்லை. பெருந்தொகை எனக்கு வேண்டாம்.

இவர் அதிகம் பேசுதற்கு வியாபாரி அவகாசம்கொடுக்கவில்லை. அன்புடன் கூடிய பலவந்தத்துடன் அவர் இவரை ஒரு வங்கிக்கு அழைத்துச் சென்றார். இருவருக்கும் அதே பாங்கியில் நிதி போடுதல், நிதி எடுத்தல் கணக்கு இருந்தது. சிவப்பிரசாதருக்கு நூற்றுக்கணக்கில் ரூபாய் போடுதல், எடுத்தல் உண்டு. மற்றவர்க்கோ பதினாயிரக் கணக்கில் பற்று வரவு நிகழ்ந்து வந்தது. தம் கணக்கிலிருந்து ஐம்பதினாயிரம் ரூபாய் எடுத்துச் சிவப்பிரசாதர் கணக்கில் போட்டுவிட்டார். அச்சம்பவம் சிவப்பிரசாதருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. தேவைக்கு மிஞ்சிய பணம் பொல்லாதது. அது மனிதனிடத்திருந்து மனிதத் தன்மையை முற்றும் கறந்துவிடும் என்று அஞ்சிக்கொண்டிருந்தார். இருவரும் வங்கியிலிருந்து வெளியில் வந்தார்கள்.

கங்காதரசேட் : இனி உங்களுக்குப் பணமுடையில்லாத பாங்கைப் பண்ணிவைத்துவிட்டேன். நீங்கள் மட்டும் நான் வேண்டிக்கொண்டபடி இன்று வசூலாகும்

பணத்தையெல்லாம் சிவ சந்நிதிக்குக் கொண்டு வந்து எனக்குக் கொடுத்து விடுங்கள். நீங்கள் தேடிக்கொடுக்கும் பணம் எனக்குச் சிவப்பிரசாதமே. அது சிறியது ஆனாலும் பெரியது ஆனாலும் அது என் பாக்கியமென்று மகிழ்வடைவேன்.

சிவப்பிரசாதரை வழக்கம் போன்று நகரத்துக்குள் வசூலுக்கு அனுப்பி விட்டு வியாபாரி தம் அலுவலில் ஈடுபட்டார். அவர் மனதுக்குள் உதித்த எண்ணங்கள் தாம் விசித்திரமானவைகள். 'சிவப்பிரசாதர் நேர்மையானவர். நெறி பிறழாதவர். வசூல் ஆகும் தொகையை உள்ளபடி சொல்லி விடுவார். அதை நம்மிடமும் கொடுத்து விடுவார். நிச்சயமாக அது ஒரு லட்சத்துக்குக் குறையாது. அதற்கெல்லாம் பூதகாரணம் கங்காதரசேட். இரு தரத்தாரும் லாபம் அடைந்ததற்கு இன்று நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றே உற்ற உபாயம். இத்தகைய நம்பிக்கையை அவர் உள்ளத்தில் எப்படியாவது ஊட்டிவிடவேண்டும்.' இங்ஙனம் முடிவு கட்டிய கங்காதரசேட் பகலையெல்லாம் எப்படியோ கழித்தார். சந்தியா வேளை வந்ததும் சிவன் கோயிலுக்குப் போய் விட்டார். அவர் வழுத்தியது சிவத்தை. சிந்தையில் எண்ணியது தமக்கு அன்று ஆதாரமாக அகப்படப்போம் செல்வத்தை. சிவப்பிரசாதரை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கிறார். ஒவ்வொரு கணப்பொழுதும் கற்பகாலம் போன்று தோன்றுகிறது. கடைசியாக அவர் எதிர்பார்த்த மனிதரும் வந்து சேர்கிறார். முறைப்படி அவர் கடவுளை வணங்குவதற்கு அவகாசம் கொடுக்கிறார்.

"இன்றைய வசூல் எப்படி?" என்று நாக்குளறக் கேட்கிறார். அகத்தில் உண்டாகும் உணர்ச்சிகளெல்லாம் முகத்தில் தென்படுகின்றன.

சிவப்பிரசாதர் முகத்தில் எப்பொழுதுமுள்ள சாந்தம். "இன்று வசூலானதெல்லாம் இதிலிருக்கிறது" என்று அவர் பணிவுடன் ஒரு பையை நீட்டுகிறார்.

சூதாடுபவன் உருட்டிய காயைப் பார்ப்பது போன்று வியாபாரி பையை விரித்துப் பார்த்தார். நாணயங்களும் நோட்டுகளும் எல்லாம் சேர்ந்து நூற்றிருபத்தைந்து ரூபாய் அணு எட்டு மட்டும்! மூண்டது கோபம். 'தெய்வங்களிடத்திலும் பித்தலாட்டமுண்டு' என்று பிதற்றிக்கொண்டு பையைப் பராமுகமாக ஒரு மரப்படலுக்கு எதிரே உதைத்துத் தள்ளினார். என்ன விந்தை! கங்காதரசேட்டின் கால் மரத்தடிக்குள்ளே விலங்கு போட்டாற்போல மாட்டிக் கொண்டிருக்கிறது. நேற்றிரவில் கேட்டது போன்று இன்றிரவில் அசரீரி கேட்கிறது.

சிவன் : சேவற்கொடியாய், சேயோனே! சிவப்பிரசாதருக்கு ஒரு லட்சம் ரூபாய் கொடுத்தாய் விட்டதா?

சேயோன் : அரை லட்ச ரூபாய் காலையிலேயே கொடுத்தாய்விட்டது. எந்தையே, இன்னும் அரைலட்சத்துக்கு இதோ ஆளைப் பிடித்துக் கொண்டிருக்கிறேன்.

---

## மும்மூர்த்திகளுக்கும் மேலான முனிவர்

நாரதர் திரிலோக சஞ்சாரி. பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம் ஆகிய மூன்றிலும் அப்போதைக்கப்போது தென்படுவார். ஒரு லோகத்தில் இருக்கும் செய்தியை மற்றொரு லோகத்துக்கு எடுத்துச் செல்வார். மூன்று லோகத்துக்கும் பொதுவாயுள்ள சமாசாரப் பத்திரிகை யென்று அவரைச் சொல்லலாம். நாதரர் கலகத்துக்குப் பேர் போனவர் என்பது வாஸ்தவம். ஆனல் அவரிடத்தில் ஒரு தனி மகிமையுண்டு. பூலோக சமாசாரப் பத்திரிகைகள் போன்று அவர் வெறும் வதந்திகளையும் வீண்வாதங்களையும் கிளப்பி விடமாட்டார். எப்போதும் அவர் காரியத்தில் கண்ணுயிருப்பார். அவர் தொடுக்கும் கர்மம் எப்போதும் மங்களகரமாகவே முடியும்.

ஒருநாள் அஸ்தமன வேளையில் நாரத மஹரிஷி பூலோகத்துக்கு விஜயம் செய்தார். ஒரு கிராமத்தில் வசித்திருந்த ஒரு பிரபுவின் வீட்டை நோக்கி அவர் சென்றார். அங்கு வதிந்திருந்த தம்பதிகள் பக்தியில் சிறந்தவர்கள். நற்குண நல்லொழுக்கங்களுக்கு இவ்விருவரும் அணிகலன்களாக இலங்கினர். இல்லறத்தார் கடமைகளில் ஒன்ருகிய விருந்தோம்புதலை அவர்கள் முறைவழுவாது செய்துவந்தனர். அன்புடனும் பணிவுடனும் அவர்கள் அதிதியை வரவேற்றனர். அதிதியை சர்க்ஷாத் தெய்வமெனப் பாராட்டவேண்டுமென்றல்லவோ வேதம் முரசறைகிறது! அங்கு எழுந்தருளிய விருந்தினர் நாரத மஹரிஷி என்பது அவர்களுக்குத் தெரியாது. வழக்கப்படி அதிதி சேவை சிறப்பாக நடைபெற்றது.

அவ் இல்லறத்தாருடைய யோக க்ஷேமத்தைப் பற்றி விருந்தினர் விசாரித்தார். அவரோடு விஸ்தாரமாகப்

பேசிக்கொண்டிருந்தபோதுதான் அவர் இன்னார் என்று வீட்டாருக்கு விளங்கிற்று. பயபக்தி ஒருபக்கம் மேலெழ, சிறிது ஆறுதலும் ஊக்கமும் மற்றொரு பக்கம் உத்பவித்தன. இல்வாழ்பவர் வணங்கி உரைப்பாராயினர் :— "தேவரீர் அனுக்கிரகத்தாலும் தெய்வ கடாட்சத்தாலும் எங்களுக்குச் செல்வம் மிக உண்டு. இம்மைக்கு வேண்டிய பேறு பல பெற்று இன்புற்று வாழ்கிறோம். எனினும் பேறுகளிற் பெரிதாகிய மக்கட்பேறு இல்லை என்ற குறை ஒன்றே எங்களது உள்ளத்தை உடற்றி வாட்டுகின்றது. இம்மைக்கும் மறுமைக்கும் உறுதுணையாவது மக்கட் செல்வம் என்று தம் போன்ற பெரியோர்கள் பகர்கின்றனர். எங்களது தீராத இக்குறையைத் தீர்த்துவைக்க வல்லவர் தாங்களே ஆவீர்." இவ்வாறு தமியர்களாகிய தம்பதிகள் விண்ணப்பித்து முடித்தனர். நாரதமஹரிஷியும் மும்மூர்த்திகளிடத்தில் அவர்களுடைய குறையைச் சொல்லி அதை அகற்றி வைப்பதாக வாக்குக் கொடுத்து விட்டு அவ்வீட்டினின்று சுவர்க்கலோகத்தை நோக்கி ஏகுவாராயினர்.

பிரம்மாவின் சந்நிதிக்கு வந்ததும் பூலோகத்தில் பிள்ளைப்பேறு இன்றிக் குறையிரந்து கிடந்த குடும்பத்தின் விஷயத்தை நாரதர் எடுத்துக்கொண்டார். அத்தம்பதிகளுக்குப் பிள்ளைவரம் விரைந்து அருளவேண்டும் என்பது முனிசிரேஷ்டரின் வேண்டுகோள். நரன்முகனே சற்று நேரம் சிந்தித்துப் பார்த்துவிட்டு மக்கட்பேறு பெறும் பிராப்தம் இந்த ஜன்மத்தில் அவர்களுக்கு இல்லையென்று தலைகளை அசைத்தார். அது முனிவர் எதிர்பாராத பதில். படைப்பவனால் ஆகாத அவ்வளவு பெரிய காரியமா அது! அவர் மன்றாடியதெல்லாம் பயன்படாது போய்விட்டது; சரி, அவனுக்கு மூலப்பொருளாகிய திருமாலிடம் சொல்லிக்

காரியத்தை நிறைவேற்றிவிடலாமென்றெண்ணி ஆங்குச் சென்றார். வினைப்பயனை மாற்றுவது தம்மால் ஆகாத காரியம் என்றார் விஷ்ணு. நாரதருக்குக் கொஞ்சம் வியப்பும் ஏமாற்றமும் உண்டாயின. மகாவிஷ்ணுவின் யோக்யதையும் அவ்வளவுதானோ என்ற எண்ணம் அக்கணமே அவர் மனதில் எழுந்தது. தேவதேவனாகிய மகாதேவனிருக்கையில் ஏமாற்றம் எதற்காக என்று தம்மைக் கொஞ்சம் உற்சாகப் படுத்திக்கொண்டு திரிலோக சஞ்சாரி சிவபெருமானது சந்நிதி சேர்ந்தார். கருணாகர முகங்கொண்டு காளை வாகனனார் அவரை வரவேற்றார். க்ஷேமசமாச்சாரம் விசாரிக்கப்பட்ட பின்பு, தாம் பூலோகத்தில் ஒரு குடும்பத்துக்குப் பிள்ளைவரம் வாங்கித் தருவதாக வாக்குக்கொடுத்து விட்டு வந்ததையும், அந்த அற்பக் காரியத்தைச் சாதிக்க அயனும் மாலும் இயலாதென்று மறுத்ததையும்பெம்மானிடம் விண்ணப்பித்தார்.சங்கரர் சற்றுச் சும்மாயிருந்தார். நாரதரும் இங்கு தம் காரியம் பூர்த்தியாகப் போகிறதென்று ஆவலுடன் அனுக்கிரகத்தை எதிர்பார்த்து நின்றார். அவரது எண்ணத்தைக் குறிப்பாலறிந்த கடவுள் பிராரப்த கர்மத்தை மாற்றியமைக்க மும்மூர்த்திகளில் எவருக்கும் இயலாதென்று இயம்பினார்.

தாம்கொண்ட மனோரதம் முற்றுப்பெறவில்லையே என முனிவர் ஏமாற்றம் மிக அடைந்தார். மும்மூர்த்திகளின் முதன்மை அவ்வளவுதானோ என்று மயங்கினார். ஊழ்வினைப்பயன் அவ்வளவு பெரிதா என்று திகைத்தார். தாம் வாக்குக் கொடுத்த இடத்தில் இனி எவ்வாறு முகம் காட்டுவது என்று ஏங்கினார். வெட்கத்தால் வெகுகாலம் அங்குப் போகாது நின்றுவிட்டார். பின்பு பளீரென மனதில் மற்றோர் எண்ணம் வந்து வாய்த்தது. பொய்யனென்னப் பேர்

பெறலாகாது என்றெண்ணிப் பூவுலகில் அவ்வீட்டை நோக்கிப் புறப்பட்டார். பிள்ளைவரம் பெற இயலவில்லை என்று சொல்லிவிடவேண்டியதுதான். இதற்குள் வருஷங்கள் பல கடந்துவிட்டன.

அஸ்தமன வேளை ஒன்றில் முனிவர் சிறிது முகவாட்டத்துடன் செல்வந்தர் வீட்டினுள் சென்றார். ஆனால் அங்குக் கண்டது அவர் எதிர்பார்த்ததற்கு மாறானகாட்சி! வரவேற்பே அவரைத் திகைத்திடப் பண்ணுகிறது. "வாருங்கள், முனி புங்கவரே! தங்கள் ஆசீர்வாதத்தால் இனி எங்களுக்கு யாதொரு குறையுமில்லை. நாங்கள் கிருதார்த்தர் ஆனோம்." அவர்களுக்கு வாய்த்த செல்வர்கள் மூவர் கொஞ்சிக் குலாவி அங்கு விளையாடிக்கொண்டிருந்தனர். அவர்களின் வயது முறையே ஆறு, நான்கு, இரண்டு ஆகும். நாரதருக்கு நடந்தேறிய வந்தனை வழிபாட்டுக்கு ஓரளவில்லை. அவருக்கோ மர்மம் ஒன்றும் விளங்கவில்லை. மௌனமாக ஆராதனையை ஏற்றுக்கொண்டு புறப்பட்டு வெளியேகினார்.

விரைந்து அவர் வைகுண்டத்துக்குப் போகிறார்; முறைமை ஒன்றையும் கவனியாது அவர் ஸ்ரீமந் நாராயணனோடு கடுகடுத்த குரலிலே சல்லாபம் செய்கிறார்: 'உம்மை மாயவன் என்று சொல்லுவது சும்மாவன்று. பிராரப்தத்தை மீறிப் பிள்ளைவரம் தர இயலாது என்கின்றீர் ஒரு சமயத்தில். அடுத்த கணத்தில் அதே வரத்தைத் தந்தருள்கின்றீர். இந்த லீலா விசித்திரம் எனக்கு விளங்கவில்லை." இவ்வாறெல்லாம் நாரதர் முறையிடுகின்றார்.

புன்னகையுடன் செவிகொடுத்துக் கொண்டிருந்த திருமால் அந்த மர்மத்தை அறிதற்குப் பூலோகத்துக்குப் போகவேண்டுமென்கிறார். அதற்காக இருவரும் மாறுவேடம் பூணுகிறார்கள். மகாவிஷ்ணுவோ தள்ளாத வயோதிகராக

வடிவெடுக்கிறார். தோல்போர்த்த எலும்புக்கூட்டினுள் தாடியும் முடியும் புதைந்த இருவிழிகள் மட்டும் தென்படு கின்றன. பிள்ளைப்பேறு பெற்ற பணக்காரன் வீட்டுவழியே போகின்றார்கள். அதற்கு அருகில் ஒரு குக்கிராமம் போய்ச் சேரவேண்டும். விருத்தாப்பியருக்கு நடக்க முடியவில்லை. வாலிபன் அவரைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு போகிறான். அதற்குள் அந்திவேளை வந்துவிடுகிறது. விரைந்து காற்றடிக்கிறது. மின்னிப் படாரென்று இடி இடிக்கிறது. இடையிடையே சோவென்று மழை பெய்கிறது. குளிரின் கொடுமையால் ஒரு பிராணியும் நடமாடவில்லை. மின்னல் வெளிச்சத்தில் சற்று எட்டத் தென்படுகிற ஒரு குடிசைக் குத் தம்மைத் தூக்கிக்கொண்டு போகும்படி விருத்தர் வாலிப னுக்குச் சொல்லுகிறார்.

காற்றும் மழையும் குடிசைக்கு வெளியில் எப்படியோ அப்படியே உள்ளேயும் தாண்டவமாடுகின்றன. கொஞ்சம் தீயும் உள்ளே மினுமினுக்கிறது. அதனெதிரே மற்றொரு மானுடவடிவம் அதை மூட்டுதற்குக் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கிறது. தன் மீதிருந்த மானுடச் சுமையை வாலிபன் இறக்கிக் கீழே வைக்கிறான். புதிதாக வந்த வயோதிகருக்கு இப்போது குளிரால் நடுக்கம் அதிகரிக்கிறது. கிண் கிண் என்று இருமுகிறார். சிறிது நேரத்துக்குள் உயிர் துறந்து விடுவார்போல் தோன்றுகிறது. குடிசையில் குடியிருந்த கிழவனார் அவசர அவசரமாகத் தீயை மூட்டுகிறார். ஆனால் அது அணைந்துபோவதன் அறிகுறியே அதிகரிக்கிறது. தீயின் ஒளி குறையுமளவு அவரது ஊக்கம் ஓங்கி வளர்கிறது. விறகுக்கட்டை போதாதென்று உணர்ந்த அவர் ஒருசிறு மட் பாண்டத்தில் தாம் வைத்திருந்த நெய்யைத் தன் மேனி முழு தும் எடுத்துப் பூசிக்கொண்டு தீயோடு தீயாக உட்கார்ந்து

விடுகிறார். தம்மீது அது பற்றி எரிய வேண்டுமென்று அன்பால் உள்ளமுருகி விரும்புகிறார். அந்தோ! திடீரென்று காட்சி மாறுகிறது! என்ன புதுமை! குடிசை வாசியாகிய கிழவனார் அக்னிமயமாய்விடுகிறார். குடிசிலெங்கும் ஜுவாலை வீசுகிறது. சாகும் தறுவாயில் வந்துசேர்ந்த விருத்தாப்பியர் இப்போது வலிவு பெறுகிறார்; வாலிபமும் வருகிறது; பின்பு மானுட வடிவம் மாறி விஷ்ணு சொரூபமாகக் காட்சி கொடுக்கிறார். ஞானக்கினியில் கிழவனார் விஷ்ணுவோடு ஒன்றாய் விடுகிறார்.

ஸ்ரீமந் நாராயணன் பகர்ந்தருள்கின்றார்:—"பார்த்தீரா, முனிபுங்கவரே, எத்தகைய தியாகம் என்பதை! பிள்ளைவரம் வேண்டிப் பரிதவித்திருந்த தம்பதிகள் இப்பெரியாருக்கு ஒருதடவை அன்புடன் அமுது படைத்துக்கொண்டிருந்தனர். அதுபோழ்து அவர்களது இச்சை பூர்த்தியாகட்டுமென்ற சங்கற்பம் இப்பெரியாரது திருவுள்ளத்தில் எழலாயிற்று. அவ்வளவுதான், அதன் பலனாக அவர்களுக்குப் புதல்வர் மூவர் பிறப்பாராயினர். மும்மூர்த்திகளாகிய எங்களது தொழில்களுக்குக் கட்டுப்பாடு உண்டு. அவரவர் வினைப் பயனை அனுசரித்துப் படைத்துக்காத்துத் துடைப்பதுமட்டும் எங்கள் கடன். அம்முறைமையினின்று விலக எங்களால் இயலாது.

"இம்மாமுனிவரோ, இது விஷயத்தில் எங்களைவிட மேலானவர். சங்கற்பமற்ற அவரது உள்ளத்தில் ஏதாவது சங்கற்பம் உதயமாய் விடுமாயின், அது ஒருக்காலும் பொய் போகாது. இத்தகைய உயர்நிலையை இவர் எய்தியதுதான் இதனினும் விந்தை. தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்தலே இவர் செய்யும் தபசு; அதுவே இவர் செய்யும் யாகம். குளிரால் வாடிய நமக்குப் பயன்படும் பொருட்டு

இவர் தம் தேகத்தை எவ்வாறு தகித்தார் என்பதைப் பார்த்தீரல்லவா? மற்றொரு பேருண்மையை ஈண்டு அறிதல் வேண்டும். இவரது சன்னிதான விசேஷத்தால் நாம் நமது மாறுவேடத்தை நீக்கி யதார்த்த வடிவுடன் மிளிர்வது அவசியமாயிற்று. தளர்ந்து தள்ளாடும் சமூகங்களை இத்தகைய தியாக மூர்த்திகள் திருத்தியமைக்கின்றனர். இவர்களது சேவையால் சாகப்போம் சமுதாயம் சக்தியும் சீர்மையும் பெறுகிறது. உயிரற்றவர் உயிர்பெறுவர்; விருத்தர் வாலிபராவர். தியாக மூர்த்திகள் தோன்றும் நாடு எந்நாளும் நன்னாடாக இலங்கும்."

---

# நாராயண பிராந்தன்

கொஞ்ச காலத்துக்கு முன்பு கேரளத்தில் நாராயண பிராந்தன் என்று அழைக்கப்பட்ட ஒருவன் வாழ்ந்திருந்தான். அவனுடைய பிறப்பைப்பற்றிப் பலர் பலவிதம் பகர்கின்றனர். அவன் எக்குலத்தைச் சேர்ந்தவன் என்பதும், எக்குடியில் பிறந்தவன் என்பதும் நமக்கு முக்கியமானவைகளாகா. பிராந்தன் என்னும் வடமொழிக்குப் பைத்தியக்காரன் என்பது பொருள். பைத்தியக்காரர்களுள் பலவகைப்பட்டவர்கள் உளர். பொருளை நாடி ஓய்வின்றி அலைபவர் ஒருவிதப் பைத்தியக்காரர். மண்ணாசையால் மலைவு கொள்பவர் மற்றொருவித மூடர். அற்ப சுகம் வேண்டி அலக்கழிப்பவர் இன்னொருவிதப் பித்தர் ஆவர். புகழுக்காக உழலும் உன்மத்தர் உண்டு. பேரில் மோகங்கொண்டு படாத பாடுபடும் வெறியர் வேறு சிலர் உளர். சுருங்கச் சொல்லின் உலகமுழுதுமே பைத்தியக்காரர் மயம். ஒவ்வொருவனும் ஏதேனும் ஒன்றை முன்னிட்டுப் பித்துப் பிடித்துப் பேய் போல் அலைகின்றான். நாராயண பிராந்தனுடைய பித்தம் எத்தகையது என்பதை அவன் செயலே விளக்கிவிடும்.

காற்று அடித்தபக்கம் சருகு உருண்டோடுவதுபோன்று மனம்போன போக்கில் நாராயண பிராந்தன் அலைந்து திரிவான். மரத்தடியில் மரக்கட்டை போன்று அசையாது உட்கார்ந்திருப்பதும், குப்பைமேட்டில் கிடக்கும் சாம்பல் மீது விருப்புடன் படுத்துப் புரளுவதும், மேகம் உலாவும் ஆகாயத்தைப் பார்த்துக் கைகொட்டி நகைத்துக் கூத்தாடுவதும் அவன் அடிக்கடி செய்யும் செயல்களாகும். நாகரிகமாக வாழும் சில மேன் மக்களுக்குப் பசி வந்துவிட்டால் அது பைத்தியத்துக்கு ஒப்பாய்விடும். அப்பொழுது அவர்கள் விலங்

கினும் கீழ்ப்பட்டவர்களாய் விடுவர். ஆனல் நாராயண உன்மத்தனை உதராக்கினி அசைக்க முடியாது. பசித்திருப்பதும் புசித்திருப்பதும் ஆகிய இரண்டும் அவனுக்கு ஒன்றே. இரண்டு அல்லது மூன்று நாள் உண்ணுதிருப்பதால் அவனுடைய உறுதியும் ஊக்கமும் குறைந்துவிடா. தற்செயலாகக் கிடைக்கும் உணவை அவன் மட்டுடன் அருந்துவான். உடலில் ஒரு கோவணத்தைத் தவிர அவனுக்கு உடையொன்றும் கிடையாது. விசும்பே கூரை; பசும்புல்லே இப்பித்தன் படுத்துறங்கும் மஞ்சம். ஆக, மக்களைச் சதா பயமுறுத்திக் கொண்டிருக்கின்ற உண்டி, உடை, இருப்பிடம் ஆகியவைகளைப் பற்றிய பிராந்திகள் நாராயணனை அணுகவில்லை.

சிறுவர்களுடன் குலாவி விளையாடுவதில் நாராயணனுக்கு மட்டில்லா மகிழ்ச்சியிருந்தது. அதுபோழ்து அவனும் ஒரு விளையாட்டுப் பிள்ளைபோன்று விளங்குவான். வயதில் முதிர்ந்தவன் எனினும், மன அமைப்பில் அவன் ஒரு பாலனுகத் தென்பட்டான். பிராந்தன் என்று அழைக்கப்பட்ட அவனிடத்துக் களங்கமின்மையே அதற்குக் காரணமாயிருந்திருக்கலாம். பிள்ளைகளுடன் ஓடுவான்; ஆடுவான்; துள்ளிக் குதிப்பான்; மண்ணில் வீழ்ந்து புரளுவான்; கலகலவென்று சிரிப்பான்;அவர்கள் இளங்கையினுல் மொத்துண்டு,அமிழ்து உண்டவன் போன்று அவன் ஆனந்தக் கூத்தாடுவான்; சில வேளைகளில் நாராயணனும் இளைஞர்களைத் திருப்பியடிப்பான்; ஆனல் தாய்ப்பூனையின் பல் தன் குட்டிகளுக்குத் தீங்கிழையாதது போன்று அவனுடைய தாக்குதலில் தீஞ்சுவை பொலியும். அப்பித்தன் கையில் அகப்பட்ட தின்பண்டங்களெல்லாம் பிள்ளைகளுக்குப் பொதுவுடைமையாயின. மாசில்லா மனதையுடைய சிறுர்களுக்குப் பொருளை எடுத்து வழங்க வழங்க அவன் கைக்கு அது மேலும் மேலும் அகப்

பட்டுக்கொண்டேயிருந்தது. சிறுவர்கள் உண்டு களித்துக் கூத்தாடிக் கொண்டிருக்கையில் உன்மத்தன் திடீரென்று அவர்களிடமிருந்து விலகியோடிவிடுவான். பிறகு அவன் விருப்பத்திற்கு விரோதமாக இளைஞர்கள் அவனை அணுக முடியாது. நினைத்த மாத்திரத்தில் தன் போக்கை அறவே மாற்றிக்கொண்டபடியால் அவன் பிராந்தன் என்று அழைக்கப்பட்டான் போலும்.

ஓர் இடத்தில் நிலைத்துத் தங்கியிருப்பது நாராயண பிராந்தனுடைய வழக்கமன்று. பல ஊர்களில் பல காலங்களில் அவன் தென்படுவான். மலைகளுக்கும் குன்றுகளுக்கும் காடுகளுக்கும் பேர்பெற்ற நாடு மலையாளம். ஆதலால் அவன் எங்குச் சென்றாலும் காடுகளைக் காண்பான். அவைகளிடத்திருந்து ஏதோ அருளைப் பெறுபவன்போன்று அவன் அவைகளை உற்றுநோக்கி உலப்பில்லா ஆனந்தம் எய்தி நிற்பான். ஆங்காங்குள்ள குன்றுகளின் மீதேறுவது அவனுக்கேற்பட்ட பொழுது போக்குகளில் ஒன்றாயிருந்தது. அப்படிச் செய்வதிலும் அவனிடத்துத் தனி விசேஷம் ஒன்று இருந்தது. மற்றவர்களைப் போன்று வெறுங்கையுடன் அவன் மலையேறான். சுமப்பதற்குச் சிறிது சிரமசாத்தியமாயிருக்கும் கல் ஒன்றைத் தூக்கித் தலையில் அல்லது தோளில் வைத்துக்கொண்டு திண்டாடித் தொத்தி ஏறுவான். திணறிக் கொண்டு உச்சியை அடைந்த பின் கல்லைக் கீழே உருட்டி விடுவான். அது புரண்டும், உராய்ந்தும், நகர்ந்தும், சிதறிக் குதித்தும் வீழ்வதைப் பார்த்துக் கைகொட்டிச் சிரிப்பான். வேறு சில வேளைகளில் அவனது விருப்பத்துக்கு மாறாக கல் கைநழுவி விட்டதாகப் பாசாங்கு செய்துகொண்டு விம்மி விம்மி அழுவான். வருந்தி மேலே கொண்டு வந்த கல் விரைந்து கீழே போகிறதே என்று புலம்புவான். துயரப்பட்டவன் போன்று

தென்பட்டவன் உண்மையில் தத்துவ விசாரம் செய்துகொண்டிருந்தான் என்று அறிஞர் சிலருக்கு விளங்கிற்று. பாரமார்த்திக வாழ்க்கைக்குப் புறம்பாயுள்ள பூதவுலக முன்னேற்றங்களெல்லாம் மலையின்மீது கொண்டு சேர்க்கப்பட்ட கல்லுக்கு ஒப்பானவைகளேயாம். மக்கள் படாத பாடுபட்டுப் பட்டணங்களைக்' கட்டுகின்றனர். பூகம்பமோ ஒரு நொடிப் பொழுதில் அவைகளை அழித்துவிடுகிறது. ஓய்வு ஒழிவு இன்றிச் செல்வம் சேகரிக்கின்றனர். அது கை நழுவுவதோ கணப்பொழுதில். ஆதிக்கத்தோடு கூடிய அரசாங்கம் ஒன்று நிறுவுவதற்கு நெடுநாளாகிறது. ஆனால் கனவிலிருந்து நனவுக்கு வருவது போன்று அது அழிகிறது. இன்று இந்திரனுக்கு ஒப்பாயிருப்பவன் நாளைக்கு இருக்க இடமின்றி இன்னற்படுகிறான். பெருகிக்கொண்டே போகும் மானுடத் திரளைக் கொள்ளை நோயும், பஞ்சமும், யுத்தமும் வந்து கூட்டித் துடைத்துக்கொண்டு போய்விடுகின்றன. இவைகள் உலக வாழ்க்கையைப்பற்றிய மறுக்கமுடியாத உண்மைகளாம். மலையுச்சியில் நின்றுகொண்டு நாராயண பிராந்தன் இவ்வுண்மைகளை நினைந்து மகிழ்வுற்றிருந்தான். ஆக்கத்துக்கு ஆசைப்படுவது போன்று அழிவுக்கும் ஆயத்தமாயிருப்பது மக்களது கடமையாகும்.

தூயனவும் தீயனவும் ஆகிய இயல்புகள் பல வேளைகளில் மனதின்கண் புதைந்து கிடப்பினும், இராக்காலங்களில் அவைகள் தோன்றித் தாண்டவமாட ஆரம்பிக்கும். இரவில் உதிக்கும் எண்ணங்களே மக்களை மேலோராகவும் கீழோராகவும் பாகுபடுத்த வல்லவைகளாகும். அதுபோழ்து போகி ஒருவனுக்குச் சிற்றின்ப நுகர்ச்சிக்கு ஏதுவான உணர்ச்சிகளும் கருத்துக்களும் உள்ளத்தில் எழா நிற்கும். யோகி ஒருவனுக்கோ ஆத்மசாதனங்களைப் பற்றியனவும்

பரம்பொருளைப்பற்றியனவும் ஆகிய நினைவுகள் தாமாகத் தோன்றும். தம் தம் கருத்துக்களுக்கு ஏற்றவாறு மக்கள் காலத்தைக் கழிப்பர். நாராயண பிராந்தனுக்கு இரவில் ஏற்பட்ட அலுவல் என்ன என்று ஆராய்வோம். பொழுது விடியுங்கால் அவன் ஊரைவிட்டு எட்டப் போய்விடுவான். ஜன சஞ்சாரமில்லாத ஜாகையையே அவன் நாடினன் எனினும், தன்னந்தனியனாய் இருந்தான் என்று சொல்ல முடியாது. அக்கினி தேவதையைத் தன்னிடத்து அல்லில் அழைத்துக்கொள்வது அவனுடைய வழக்கம். எங்கேயாவது தேடி சில விறகுக் கட்டைகளை எடுத்துத் தீமூட்டி அதனருகில் அமர்ந்துகொள்வான். நள்ளிரவில் தீயினருகில் அமர்ந்து தியானம் பண்ணினால் மனது விரைந்து இறைவனிடத்துச் செல்லும். ஒருவேளை நாராயணன் என்ற பித்தனுடைய மனது இரவெல்லாம் இறைவனுடைய சந்நிதி சார்ந்திருந்தது போலும்.

ஒருநாள் மாலை வேளையில் நாராயண பிராந்தன் ஓர் ஊருக்கு அருகில் உலாவிக்கொண்டிருந்தான். இயற்கை எங்கும் அமைதி குடிகொண்டிருந்தது. அதைவிடப் பன்மடங்கு அதிகமான அமைதி உன்மத்தனது உள்ளத்தில் ஒளிர்ந்தது. இருளும் படலம் படலமாக விரைந்து வந்து சூழ்ந்து கொண்டிருந்தது. இனி, ஓரிடத்தில் நெருப்பைக் கிளப்பி உட்காரவேண்டுமென்று அவன் எண்ணி முடிப்பதற்குள் கண்ணெதிரே தீ வெளிச்சம் ஒன்று தென்பட்டது. தான் நின்றுகொண்டிருந்த இடம் சுடுகாடு என்று அப்பொழுது அவனுக்கு விளங்கிற்று. ஆனால் சுடலைத்தீ வேள்வித்தீ ஆகிய இவ்விரண்டுக்குமிடையில் வித்தியாசம் பாராட்டுபவன் அல்லன் அப்பித்தன். அன்றைக்கு நெருப்பு மூட்டவேண்டிய வேலை தனக்கு ஏற்படவில்லை என்று

எண்ணிக்கொண்டு அதனருகில் போய் அவன் அமர்ந்து கொண்டான்.

நெடுநேரத்துக்குப் பிறகு அவனுடைய நிஷ்டை கலைந்தது. அப்பொழுது நடுநிசி. பிரளயகாலம் போன்று ஒரே காரிருள். சுடலைத் தீயின் வேகமும் குறைந்துவிட்டது. பிணத்தின் பெரும்பகுதியை விழுங்கியபின் பாக்கியிருக்கும் சிறு பகுதியை அது சப்பிக்கொண்டிருப்பது போன்று தோன்றுகிறது. கருகிய பிணத்துண்டினின்று உருகிவரும் நீரையும் நெய்யையும் கனல் "சொய்...சொய்..." என்று ருசி பார்க்கிறது. இடையிடையே கனல் சரிந்து விழும் சத்தம் கேட்கிறது. அவ்விடத்தின் அமைதியைக் கலைக்கும் அரவம் வேறொன்றுமில்லை. இப்பொழுது திடீரென்று கணக்கற்ற நரிகள் ஒன்று சேர்ந்து ஊளையிடுகின்றன. ஊழிக்காலத்தை அறிவுறுத்துவது போன்று அவ்வொலி காதைத் துளைக்கிறது; குலை நடுங்கும்படி செய்கிறது. ஆனால் நாராயண பிராந்தன் அவையொன்றையும் கவனியாது ஆனந்தமாய் வீற்றிருக்கிறான்.

அனல் வெளிச்சத்தை முன்னிட்டு அகலாத அந்த இருளில் இப்பொழுது உருவம் ஒன்று தென்படுகிறது. பித்தன் அதைப் பொருட்படுத்துகிறானில்லை.

"யாரடா, இங்கு இவ்வேளையில் துணிவுடன் உட்கார்ந்திருப்பது?" என்று அதட்டுகிறது தோன்றிய வடிவம்.

"பிறரைப்பற்றிய கவலை உனக்கென்ன? நீ யாராயிருந்தாலும் உன் வேலையைப் பார்த்துக்கொண்டு போ" என்று அசட்டையாக நாராயணன் நவிலுகிறான்.

"நான் ஸ்மசான காளியின் பூதகணங்களில் ஒன்று. அதோ அவள் எழுந்தருள்கின்றாள்! தப்பிப் பிழைக்க

விரும்பினால் ஓடிப்போ இப்பொழுதே," என்று எச்சரிக்கை செய்கிறது அவ்வுருவம்.

சிலம்பொலி கேட்கிறது. சூரியோதயம் போன்று ஒளிப்பிழம்பு உருவெடுக்கிறது. பயங்கரமே வடிவெடுத்துள்ள சம்ஹார சொரூபிணி பிரசன்னமாகிறாள்..."எமக்குரிய இடத்தைவிட்டு அகன்றோடு. அல்லாவிடின், அண்டங்கள் அடிபடும் அடியின்கீழ் நீ மட்டும் மிஞ்சுவது எங்ஙனம்?" என்று ஆக்ஞாபிக்கின்றாள் அவள்.

அது தன்பால் விடுத்துள்ள ஆணை என்பதை உன்மத்தன் உணர்கிறான். அவனும் பித்தம் தலைக்கேறியவன் போன்று பகர்வானாயினன்: "இப்பரந்த உலகில் உனக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமை எனக்கும் உண்டு. உட்கார்ந்த இடத்தைவிட்டு ஒருவர்க்கு அஞ்சி நான் அகலுதல் கிடையாது. அதோ ஆங்குச் சென்று நீ விரும்பியவாறு ஆடுக."

இத்தகைய மொழியைக் காளிகாதேவி முன்பு எங்கும் கேட்டது கிடையாது. தன் தாண்டவங்களில் மிகக் கொடியதும் பயங்கரமானதுமான சம்ஹாரத் தாண்டவத்தைத் துவக்குகிறாள். அதன் உக்கிரந்தான் என்னே! அவள் மூச்சு விடுவதால் மூவுலகங்களும் நடுங்குகின்றன; அடி எடுத்து வைக்குங்கால் அண்டங்கள் அழிந்து மறைகின்றன. நாவை நீட்டி உதட்டைத் துடைக்குங்கால் கோடானுகோடி உயிர்கள் மடிகின்றன. தேவகணங்கள் நடுங்கி நின்றுகொண்டு, "தாயே, நின் திருவுளப் பாங்கின்படி ஆகுக" என்று போற்றுகின்றனர். அவள் வீசுகிற வாளிலிருந்து நாராயண பிராந்தன் மட்டும் தப்பிப்பது எங்ஙனம்? ஆனால் அவனுடைய மனத்தகத்தில் மரண தத்துவத்துக்கு இட

மில்லை. பயம் இன்னதென்று அவனறியான். அபயம் அவனுக்கு அணிகலம். உயிர்களை வாட்டுகிற சம்ஹாரத் தாண்டவம் அவனுக்குச் சப்பையாகத் தோன்றுகிறது. 'இவ்வளவுதானா இவளுடைய ஆர்ப்பாட்டம் என்று எண்ணுகிறான். "உம், உன்னுடைய பொம்மலாட்டம்' முழு தையும் காட்டு. வேண்டுமானால் இந்த உடலத்தையும் எடுத் துக்கொள்" என்று தன் தேகத்தையும் அவளுக்குப் படைக்க முன் வருகிறான்.

பயங்கரி தேவிக்கு வெட்கம் வந்து விடுகிறது. அவளு டைய கொடூரச் செயல் பிராந்தன் மாட்டுப் பலிக்கவில்லை. " மகனே, உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் " என்கிறாள் அவள்.

பிராந்தன்: நான் யாரிடத்திலும் எதையும் கெஞ்சிக் கேட்ப தில்லை.

தேவி: என் தரிசனம் கிடைக்கப்பெற்றவருக்கு ஏதாவது வரம் கொடுக்க நான் கடமைப்பட்டிருக்கிறேன்; ஆதலால் என் பொருட்டு நீ ஏதாவது ஒன்றைக் கேட்பாயாக.

பிராந்தன்: (சற்று சிந்தித்துப் பார்த்துவிட்டு) அப்படி யானால் எனது இடது காலில் இருக்கும் இந்த வீக் கத்தை வலது காலுக்கு மாற்றுவாயாக.

தேவி: பிராரப்த கர்மத்தை மாற்றியமைக்கும் சுதந்திரம் எனக்கில்லை.

பிராந்தன்: அங்ஙனமாயின் உன்னிடமிருந்து பெறும் வரமும் எனக்கொன்றுமில்லை.

மாயாதேவி வேறு ஒன்றும் செய்ய முடியாதவளாய் மறைகிறாள். உலகத்தவரால் நாராயண பிராந்தன் என்று

அழைக்கப்பட்டவர் உண்மையில் ஒரு கடந்த ஞானியாவார். சித்தன் போக்கு சிவத்தின் போக்குக்கு ஒப்பு என்னும் கோட்பாடுக்கு ஏற்ப அவர் சிவ சொரூபமாகவே இலங்கினர். ஞானியர் எதற்கும் அஞ்சுவதும் இல்லை; எதையும் கெஞ்சிக் கேட்பதும் இல்லை. அஞ்சுபவர் ஓயாது செத்துக் கொண்டிருக்கின்றனர். அஞ்சாதவர் சாகாத நிலை எய்துகின்றனர். யாசகம் கேட்க வந்த வாமனர் வடிவத்தில் சிறியவர் ஆனது போன்று கெஞ்சிக்கேட்பவர் தன்மையில் சிறியவர் ஆகின்றனர். அஞ்சாமையும் கெஞ்சாமையும் பாரமார்த்திகப் பெருவாழ்வு என்பதாம்.

---

## இந்தியாவின் உயிர் நாடி

உலகிலேயே மிகப் பெரிய மலை ஹிமாலயம். முக்கோணம் போன்று வடிவெடுத்திருக்கும் இந்தியாவின் வடபுறத்திலுள்ள நெடுஞ்சுவர் அது. புண்ணிய க்ஷேத்திரங்களும் தீர்த்தங்களும் பல அதன்கண் உள. ஹிமாலய க்ஷேத்திரங்களுள் பிரசித்தி பெற்றவை திருக்கேதாரம், பத்ரிகாச்ரமம் என்னும் இரண்டு. முந்தியது சிவ க்ஷேத்திரம்; பிந்தியது விஷ்ணு க்ஷேத்திரம். சமுத்திர மட்டத்திலிருந்து பதினாயிரம் அடிக்கு மேற்பட்டவை அவ்விரண்டும். சர்வ காலமும் உறைபனியிலே அவை உறைந்திருக்கின்றன. கோடையில் ஆறு மாதத்திற்கு மக்கள் ஆங்குச் செல்ல முடியும். அவர்களுடைய ஆராதனைகளும் அந்த ஆறு மாதங்களிலேதான் நிகழ்கின்றன. பாக்கி ஆறு மாதங்களில் கோயில்கள் உறைபனியில் மறைந்து கிடக்கும். அப்போது தேவர்கள் பூஜை செய்கிறார்கள் என்பது ஐதிகம். இந்தியாவின் பாங்கை உள்ளபடி அறிய விரும்புபவர் இந்த யாத்திரையில் ஈடுபடக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

ஆண்டு தோறும் சித்திரை மாதத்தில் மலையடிவாரத்தில் ஹரித்துவாரத்திலிருந்து இந்த யாத்திரை துவக்கப்பெறுகிறது. அங்கு வந்து சேருகிற இருப்புப்பாதை வண்டித் தொடர் ஒவ்வொன்றும் யாத்ரீகர்களை ஏராளமாக இறக்குமதி செய்யும். காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரி பரியந்தம் எல்லா மாகாணங்களிலிருந்தும் மக்கள் வந்து சேர்வார்கள். விதவிதமான உடைகள், வேறுவேறான உணவு வகைகள், மாறுபடும் மொழிகள், முரண்படும் பழக்க வழக்கங்கள் ஆகியவைகளை ஒன்று சேர்த்து அங்குக் காணலாம். ஆடவர், மகளிர், முதியோர் இளைஞர், கற்றவர்

மற்றவர், செல்வர் வறிஞர், இல்லறத்தார் துறவறத்தார் ஆகிய பாகுபாடுகளுக்கும் அப்பெருங் கூட்டம் இடம் கொடுக்கும்.

இரண்டு பதிகளுக்கும் போக வர சுமார் நானூறு மைல் ஆகிறது. வழி முழுவதும் கங்கைக் கரையோரமிருக்கிறது. வெவ்வேறு இடங்களில் உற்பத்தியாகி ஓடிவரும் உபநதிகளின் தொகை கங்கை. கேதாரத்திலிருந்து பெருக்கெடுக்கும் நதியின் பெயர் மந்தாகினி; பத்ரியிலிருந்து வருவது அலக்நந்தா. இவை போன்ற இன்னும் பல சிற்ருறுகள் வந்து ஒன்று சேர்கின்றன. தங்குதற்கேற்ற இடங்கள் வழி நெடுக உண்டு. நதிக்குப் பக்கத்தில் எனினும் பாதையில் ஏற்றமும் இறக்கமும் மாறி மாறியமைகின்றன. வாழ்வு என்னும் பயணத்தில் இன்ப துன்பம் என்னும் ஏற்றமும் இறக்கமும் மாறி மாறி அமைகின்றனவன்ரோ?

அடர்ந்த காடு உள்ள இரண்டு மூன்றிடங்களில் இரவு வேளையில் பயணம் போவது பொருந்தாது. சிறுத்தை, புலி, கரடி முதலியன ஆங்கு ஆதிக்கம் செலுத்தும் வேளை அது. வனத்தில் வாழும் விளங்குகள் இல்லாத பெரும் பகுதியான பாதையில் இரவும் பகலும் பயமின்றிப் போகலாம். ஓய்வுக்கென்று அமைந்தது நடுநிசி. கோடைக் கதிரவனது பேராட்சிக்குப் பெயர் பெற்றது நடுப்பகல். ஆக நடுநிசியும் நடுப்பகலும் தவிர, மற்ற வேளைகளிலெல்லாம் யாத்திரை வாசிகள் சிலராவது நகர்ந்து கொண்டே இருப்பார்கள். தொடர்ந்து சுமார் ஐந்து மைல் தூரம் நடந்தால் தங்குமிடம் ஏதேனும் ஒன்றுக்கு வந்துவிடலாம். கடை கண்ணிகள் ஆங்குண்டு. அவ் எளிய கட்டிடங்களின் மாடிகளே யாத்ரீகர்களுடைய தங்குமிடமாகின்றன. நல்ல கூரையிருக்கும்; ஆனல், கதவு ஜன்னல்கள் இரா. காற்றும்

மழையும் சேர்ந்து வருங்காலை வீட்டுக்குள் இருப்பதும் வெளியில் இருப்பதும் ஒன்றே. தங்குமிடம் ஒவ்வொன்றுக்கும் சட்டி என்று பெயர். ராம் சட்டி, மட்சட்டி, பட்சட்டி, ஹனுமான் சட்டி இங்ஙனம் பெயர்கள் அமைந்திருக்கின்றன. பாதையை ஒட்டி நீண்டிருக்கும் ஒவ்வொரு கூடத்திலும் ஏககாலத்தில் இரண்டு அல்லது மூன்று சிறு கூட்டங்கள் தங்கியிருக்கும். பிறர் கண்ணுக்குத் தென்படாதிருப்பதற்கு மறைப்பு ஒன்றுமில்லை. யாரும் மறைந்திருந்து வாழலாகாது. வெட்டவெளியான வாழ்வு அந்த யாத்திரையின் விசேஷம் எனலாம்.

ஒவ்வொரு வீடும் அதில் கடை வைத்திருக்கும் கடைக்காரனுக்குச் சொந்தம். ஒரு கூட்டம் எத்தனை பேர் சேர்ந்தது என்று கடைக்காரனிடம் சொல்லவேண்டும். அதற்கேற்ற அரிசி, பருப்பு, விறகு, பாத்திரம் முதலியன அவன் கொடுத்து விடுவான். வீட்டு வாடகை என்பது தனியாக ஒன்றுமில்லை. கிளம்பிப் போகும்பொழுது கடைக்காரன் கேட்கிற பணத்தைக் கட்டிவிடுவது வழக்கம். விற்பவர், வாங்குபவர் ஆகிய இரு தரத்தாரிடத்திலும் பிறரை ஏமாற்றும் மனப்பான்மையில்லை. ஆகையால் வியாபாரம் ஒழுங்காக நடைபெறுகிறது. ஒரு வீட்டின் ஒரு பகுதியில் காலையில் ஒருகூட்டம், மத்தியானம் இன்னொன்று, மாலையில் மற்றொன்று தங்கியிருப்பது இயல்பு. வழிப்போக்கர்களாகிய நமக்கு இவ்வுலகமே ஒரு தங்குமிடம் என்பதை அக்காட்சி ஞாபகமூட்டும்.

நல்ல மனமுடையவரே இந்த யாத்திரையை மேற்கொள்கின்றனர். கீழான பாங்குடையவர் கால் நலிய இந்த மேலாம் இடத்துக்கு வர நினைப்பதுமில்லை. நானாவித இயல்புடைய நன்மக்கள் உள்ளத்தில் உறையும் லட்சியம்

ஒன்றே என்பது கண்கூடாகப் புலப்படும். பேச்செல்லாம் பகவானைப் பற்றியதாக இருக்கும் ஒரு கூட்டத்தில். இறைவனுடைய திருநாமத்தை ஓதாது ஓரடி மேலெடுத்து வைக்க இசையார் இன்னொரு சாரார். நாமஜபம் செய்து கொண்டே ஒருவர் நகர்ந்து செல்லுவார். அமர்ந்திருக்கும் இடமெங்கும் ஆனந்தமாகப் பஜனை பண்ணும் கூட்டங்களைக் காணலாம். தென்படுபவர்களையெல்லாம் தெய்வ சொரூப மாகப் பாராட்டி வணங்குபவர் பலர். யாண்டும் கடவுளைக் கருத்தில் வைத்துக் கடவுளை நோக்கிச் செல்லுதல் இத்தனை பேர்க்கும் குறிக்கோளாகும். பரதகண்டம் முழுதுக்கும் பொதுவாயுள்ள இயல்பும் இதுவே.

இளந்துறவியர் இருவர் இந்த யாத்திரையை மேற் கொண்டனர். நவீன முறையில் அவர்கள் மேலாம் கல்வி பயின்றவர்கள். வேதாந்தப் பேரியக்கம் கொண்டுள்ள ஒரு பெரிய ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள். தங்கள் மரபின் கொள்கைக்கு ஏற்ப அவர்கள் இந்த யாத்திரையில் போகும் பொழுதும் பரநல சேவையில் ஈடுபட்டிருந்தனர். கையில் கொஞ்சம் மருந்து வகைகளை அவர்கள் வைத்திருந்தார்கள். காய்ச்சல், தலைவலி, வயிற்றுக்கடுப்பு, வயிற்றுப்போக்கு முதலியன மலை நாட்டினுள் வருபவர்க்கிடையில் நேர்வ துண்டு. அத்தகைய பிணியாளரைச் சந்திக்கும்போதெல் லாம் அவர்களுக்கு நேர்ந்த நோய் யாது என்று கண்டறிந்து, அதற்கேற்ற ஔஷதத்தை வழங்கினர். தேவையேற்பட்ட போதெல்லாம் நோயாளிகளுக்குப் பணிவிடையும் செய்து வந்தனர். சில வேளைகளில் இத்திருத் தொண்டர்களது யாத்திரையே இரண்டொருநாள் தடைப்பட்டுவிடும். அதை அவர்கள் இடைஞ்சலாகக் கருதவில்லை. மக்களுக்குப் பணி விடை செய்து மேனிலைக்குப் போவதைவிட மிக்கது

அது என்பது அவர்களது துணிபு. தங்கள் உடல், உடைமை, உயிர் எல்லாம் உலக நன்மையின் பொருட்டு ஒப்படைக் கப்பட்டவை யன்றோ!

திருக்கேதாரம், பத்ரிகாச்ரமம் யாத்திரையிலே ஒருநாள் மாலையிலே இத்துறவியர் இருவரும் ஒரு பெரிய ஏற்றத்தில் தள்ளாடி ஏறிக்கொண்டிருந்தனர். சந்தியா வேளையைத் தாண்டி, அந்தி வேளையும் சிறிது சிறிதாய் வந்துகொண் டிருந்தது. இருவருக்குமிடையில் பேச்சொன்றுமில்லை; பேச்சுப் பேசும் நேரமல்ல அது. இயற்கை முழுதும் ஒரே அமைதி. வான் அளாவும் மலைத்தொடரும், வெட்டவெளியும் வேற்றுமையிழந்து, ஒன்றில் ஒன்று மறையும் தறுவாய் அது. புறத்தில் பொலிந்த சாந்தம் இவ்விரு சந்நியாசிகள் அகத்தி லும் பொலிவதாயிற்று. அவர்களுக்குப் பேச நா எழவில்லை.

சூழ்ந்து வந்த இருளிலே பாதையோரம் இருந்த கற் பாறை யொன்றின் மீதிலே இயங்குதிணை ஏதோ ஒன்று இருந்தது போன்று அவர்களுக்குப் புலப்பட்டது. உற்று நோக்கினார்கள். ஆம், அது உயிர்ப்பிராணிதான். இன்னும் கொஞ்சம் கவனித்துப் பார்த்தார்கள். மானுட வடிவே. அருகில் சென்றார்கள். "யார் அது?" என்ற வினா. ஆனால் விடையொன்றும் வரவில்லை. மேலும் வினவுதற்கு முன்பு 'விண் விண்' என்று இருமல் சத்தம் கேட்டது. அனத்துதல் அதைப் பின் தொடர்ந்தது. கேட்டவர்களுக்கு விஷயம் விளங்கி விட்டது. யாத்ரீகன் யாரோ ஒருவன் நோய்வாய்ப் பட்டிருக்கிறான். தங்கள் கடமையைச் செய்ய அவர்கள் அங்கேயே நின்று கொண்டார்கள். இனி விவரம் முழுதும் தெரிந்தாகவேண்டும்.

சில நிமிஷங்களுக்குள் இச்சந்நியாசிகளுடைய சாமான் களைத் தூக்கிக்கொண்டு வந்த கூலியாட்கள் இருவர் வந்து

சேர்ந்தார்கள். அன்னவர் கைவசமிருந்த லாந்தரை வாங்கிக் கொளுத்திப் பார்த்தார்கள். விளக்கு வெளிச்சத்தில் விஷயம் விளங்கிற்று. நோய்வாய்ப்பட்டிருப்பவள் வயது முதிர்ந்த ஒரு கிழவி. மயங்கிப் படுத்திருக்கிருள். அவளுக்குச் சொந்த மான ஒரு சிறு துணி முட்டை தலையணையாக உதவுகிறது. உடையிலும் முகவெட்டிலும் அவள் பஞ்சாப் மாகாணத் தைச் சேர்ந்தவள் போன்று புலப்படுகிருள்.

'அம்மா, அம்மா' என்று அவளை எழுப்புகிருர்கள். கிழவி கண் விழித்துப் பார்க்கிருள். "நீங்கள் யார்?" என்று வினவுகிருள். நோய்வாய்ப்பட்டிருந்தாலும் அவள் குரலில் உறுதி தொனிக்கிறது.

"நாங்கள் இருவரும் சாதுக்கள். யாத்திரை போய்க் கொண்டிருப்பதற்கு இடையில் வழியில் நோயால் வருந்து பவருக்கு மருந்து கொடுக்கிருேம்; பணிவிடை செய்கிருேம். தாயே, தங்களுக்குற்ற துயரம் யாது? உங்கள் உடன் வருபவர் வேறு யாரும் இல்லையா?

கிழவி: தனியாகத்தான் எங்கள் ஊரிலிருந்து நான் புறப் பட்டேன். இந்த யாத்திரையைத் தனியாகவே செய்ய வேண்டும் என்பது என் விருப்பம்.

சாதுக்கள்: இது போன்ற சந்தர்ப்பங்களில் துணைக்கு யாராவது வந்திருந்தால் சௌகரியமாக இருந்திருக் குமே?

கிழவி: இவ்வுலகினுள் நாம் வந்ததும் தனியாக; இவ் வுலகை விட்டு இறுதியில் போவதும் தனியாக. இடை யில் தனியாயிருக்க தயக்கம் எதற்கு?

சாதுக்கள் மறுமொழி சொல்லத் தெரியாது திகைக் கிருர்கள். அப்பேச்சை நிறுத்திவிட்டுத் தங்களுக்கு முக்கிய

மான மற்ற விஷயத்தை இப்பொழுது எடுத்துக் கொள்கிருர்கள். "அம்மா, உங்களுக்கு உற்ற நோய் யாது?"

கிழவி: காய்ச்சலில் காய்கிறேன். நான்கு நாளைக்கு முன்பும் இந்நோயில் சிறிது வருந்தினேன். இப்பொழுது அதன் வேகம் எனக்கு எழுந்து நடக்கவும் இடந்தர மாட்டேனென்கிறது.

சாதுக்கள்: நல்ல மருந்து ஒன்று தருகிருேம். விரைவில் குணம் செய்துவிடும். அதை அருந்துகிறீர்களா?

கிழவி: ஆக்ஷேபமில்லை.

முட்டையை அவிழ்த்து, வேண்டிய மருந்தை எடுத்து வழங்குகிருர்கள். மேலும் அவர்கள் தங்களுக்குள் ஆலோசிக்கிருர்கள். தங்குமிடம் ஒன்றை நாடி மேல்நோக்கிச் சென்ருல் ஏற்றம் இரண்டு மைல் இருக்கிறது. திரும்பிக் கீழ்நோக்கிச் சென்ருல் இறக்கம் மூன்று மைல் இருக்கிறது. கடும் ஜுரத்தில் காய்ச்சலுறும் கிழவி ஒருத்திக்கு இரண்டு மைல் ஏற்றத்தில் ஏறுவதைவிட மூன்று மைல் இறக்கத்தில் போவது எளிது. உயரத்தில் இருக்கும் சட்டியை விடத் தாழ்வில் இருக்கும் சட்டியில் நோயாளி தங்கியிருக்க வசதிகள் அதிகம் உண்டு. ஒரு தடியைக் கொண்டு இவளைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு கீழே கடத்தி விடலாம். "அம்மா, நாங்கள் கொடுக்கும் மருந்தைச் சாப்பிட்டுக் கொண்டு நீங்கள் மூன்றுநாள் ஓய்வெடுத்துக்கொண்டால் நோய் முற்றிலும் நீங்கிவிடும்."

கிழவி: அதற்கென்ன, அப்படியே செய்யலாம்.

சாதுக்கள்: சிகிச்சையின் பொருட்டு உங்களைக் கீழே இருக்கும் சட்டிக்குத் திருப்பியழைத்துச் செல்ல நாங்கள் தீர்மானித்திருக்கிருேம்.

கிழவி: ஆ! நீங்கள் சாது மஹாத்மாக்கள். உங்கள் வாயில் இத்தகைய வார்த்தை வரலாமா?

சாதுக்கள் திகைப்படைகிறார்கள். மேலும் விஷயத்தை நோயாளிக்கு விளக்குகிறார்கள்: "நாங்கள் நவிலுவதெல்லாம் உங்கள் நன்மைக்காகத்தானே!"

கிழவி: நன்மைக்கா? இல்லை, ஒருபோதும் இல்லை. நமன் போன்று எனக்குக் கேடு சூழ நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள்!

சாதுக்களுக்கு இன்னும் அதிகத் திகைப்பு: "தாயே, எங்களை நம்புங்கள். இப்பொழுது நாங்கள் மனதில் நாடியிருப்பது உங்கள் நலன் ஒன்றே."

கிழவிக்குப் புதிய வேகம் மனத்தகத்துப் பிறக்கிறது. அவள் பகர்கின்றாள்: "கேதாரநாதனை நோக்கி நான் முன் வைத்த காலைப் பின்வாங்கும்படி நீங்கள் பகர்கிறீர்கள். துறவி வேடம் பூண்டுள்ள உங்களுக்கு இப்பேச்சு பொருந்துமா?"

துறவியர் திகைத்து விடுகின்றனர். ஆயினும் அவர்கள் மேலும் எடுத்தோதுகிறார்கள்: "தாயே, உடல் நிலையை முன்னிட்டுக் கீழே இறங்குதலில் குற்றமொன்றுமில்லை. அதைச் சீர்படுத்தியான பிறகு பன்மடங்கு அதிக சிரத்தையுடன் மேல்நோக்கிப் போகலாம்.

நோயாளி: துறவிகளாகிய நீங்கள் நினைப்பது உடலைப் பற்றி! உடலுக்கு ஆறிலும் சாவு; நூறிலும் சாவு. அதை முன்னிட்டு நான் கொண்ட தீர்மானத்தை மாற்றேன். கணப்பொழுதும் கேதாரநாதனுக்கு நான் புறங்காட்டேன். மேல்நோக்கி அவனைப் பார்த்தவண்ணமாயிருந்து, இம்மேனி விழுமாயின் அதில் தீங்கு ஒன்று

மில்லை. உயிர் இறைவன் உறைவிடம் போய்ச்சேரும். கீழே திரும்பிப் பார்த்து உடல் துறந்தால் உயிரும் கீழ்மையடையும். பேதையாகிய பெண் எனினும், கடவுளை நோக்கி நான் முன் வைத்த அடியைப் பின் வாங்கேன்.

துறவியர்: தாயே, இந்த நிலையில் உங்களை நாங்கள் இங்கு விட்டுச் செல்ல எங்களுக்கு மனம் வரவில்லை. என் செய்வது?

கிழவி: உங்களை எதிர்பார்த்தா நான் இங்கு வந்தேன்? நீங்கள் செய்யவேண்டிய கடமையைச் செய்தாய் விட்டது. நீங்கள் போகலாம்.

சந்நியாசிகள் இருவரும் புறப்படுகையில் திடீரென்று அவர்களுடைய உள்ளத்தில் சுவாமி விவேகானந்தரது சீரிய கருத்து ஒன்று நினைவுக்கு வந்தது:— 'பாரமார்த்திக வாழ்வு இந்தியாவின் உயிர்நாடி. இந்தியன் ஒருவன் பிறந்திருப்பதும், வாழ்ந்திருப்பதும், உயிரைத் தியாகம் பண்ணுவதும் தெய்வத்தின்பொருட்டு. இந்தியாவைவிட்டுப் பாரமார்த்திக வாழ்வு போய்விடுமாயின், அத்துடன் அந்நாடும் அழிந்துபட்டுப்போம். அது உலகுக்கே பெரு நஷ்டமாகும். ஆனால், அத்தகைய பரிதாபகரமான நிலைமை வந்துவிடாது. இந்தியா என்றென்றும் தனது பாரமார்த்திகப் பெருவாழ்வைப் பாதுகாக்கும். இந்தியாவின் உயிர்நாடி நன்கு அடித்துக்கொண்டிருக்கும் காலமெல்லாம் அது உலகுக்கு அருள் விருந்து அளித்துக்கொண்டிருக்கும்.'

# அவர் இயக்கம் இத்தகையது

ஹிமாலயத்தில் இருக்கும் பத்ரிகாச்ரமத்திற்கு 1934ஆம் வருஷம் மே மாதத்தில் ஸ்ரீமத் சம்புத்தானந்த சுவாமிகளுடன் நான் சென்றிருந்தேன். கால் நலிய நெடுந்தூரம் நடந்து வந்துசேரும் யாத்ரீகர்கள், தூசி படிந்த பாதமுடையவர் களாய் நேர் பத்ரீநாராயணன் முன்னிலைக்குச் சென்று ஆஜர் கொடுப்பது ஐதிகம். அதற்கு அறிகுறியாக ஆலயத்தினுள் ஆராய்ச்சி மணியையும் அடித்துவிடுவதுண்டு. சடங்கு ஒன்றுமில்லாது தந்தையிடம் மைந்தன் போவது போன்று, நாங்களும் நாராயணனைச் சென்று சேவித்தோம்.

இருக்க இடம் தேடும் செயல் அதன் பின்னர் ஆரம்பித் தது. சாமான்களோடு கூலியாட்கள் இருவரையும் என்னையும் ஓரிடத்தில் காத்திருக்க வைத்துவிட்டு, காலே கம்பளிவாலா வின் சத்திரத்தைப் பார்த்துவர சம்புத்தானந்த சுவாமிகள் போய்விட்டார். தென்னிந்தியாவில் ஆலயங்களுள் நாம் அர்ச்சகர்கள் என்று அழைப்பவர்களை வட இந்தியாவில் 'பண்டாக்கள்' என்பார்கள். இந்தியா முழுதிலும் அவர் கள் பாங்கு ஒரே விதமானது. பொருளின்மை அத்தகைய பரிதாபகரமான நிலைக்கு அவர்களைக் கொண்டுவந்து விட் டது. பொதுப்பட அவர்களது போக்கு யாருடைய உள்ளத் திலிருந்தும் பக்தி பறந்தோடும்படி செய்துவிடும். அவர்கள் கையில் அகப்படாது ஆலயம் தொழுது திரும்புபவர்கள் பாக்கியவான்களே யாவர். பத்ரிநாராயணன் ஆலயத்துக்கு வெளியே காத்துக்கொண்டு நின்ற என்னை நோக்கி ஒரு பண்டா வந்தார். அவர் எதற்காக வருகிறார் என்பதும் எனக்கு விளங்கிவிட்டது. கைப்பொருளை அனுசரித்து அவர்கள் ஆளைத் தரம் போட்டுவிடுவார்கள். அருகில்

வந்ததும் "எந்த ஜில்லா?" என்றார். பதில் சொல்லாது திருப்பிக் கேள்வி கேட்பது போன்று என் புருவத்தை மேல் நோக்கி ஒரு வெட்டு வெட்டினேன்.

"எந்த ஜில்லா?" என்றார் மறுபடியும்.

புருவத்தை வெட்டினேன் நான், மறுபடியும். மூன்றும் முறை அதே கேள்வி. மூன்றும் முறை அதே புருவத்தின் அசைவு. நான்காம் முறை கொஞ்சம் அதிகாரத்துடன் "எந்த ஜில்லா?" என்று பண்டா கேட்டார்; பழையபடி புருவத்தின் அசைவு. பகடி பண்ணுகிறான் என்று முணுமுணுத்துக் கொண்டு பண்டா போய்விட்டார்.

சிறிது நேரத்தில் சம்புத்தானந்த சுவாமிகள் திரும்பி வந்தார். "சத்திரத்தில் பெருங்கும்பல். அங்குத் தங்குவது சாத்தியப்படாது. வாடகைக்கு வேறு இடம் பார்க்கலாம். அதற்கு முன்பு ராவல் சாஹிபை தரிசிப்போம்" என்றார். ராவல் சாஹிப் என்பவர் கோவிலுக்கு முக்கியமான தர்மகர்த்தா. பூஜை பண்ணுபவரும் அவரே. நிர்வாகம் அனைத்தையும் அவரே பார்க்கிறார். அப்பெரியார் திருவாங்கூர் சமஸ்தானத்திலிருந்து அனுப்பப்பெற்றவர். நம்பூதிரி மரபைச் சேர்ந்த பிரம்மசாரி அவர். ஆதிசங்கரர் காலத்திலிருந்து அந்த ஏற்பாடு முறையாக நடைபெற்று வருகிறது. பத்ரியில் முக்கியமான பூஜாரியாயிருப்பவர் ஒரு பிரம்மசாரியேயாவார். ஒருவருக்குப் பிறகு ஒருவராகத் தக்க பிரம்மசாரியைத் தேர்ந்தெடுத்து அனுப்புவது திருவாங்கூர் சமஸ்தானத்தின் பொறுப்பாகும்.

நாங்கள் பார்க்கச் சென்றவரின் முழுப்பெயர் வாசுதேவ ராவல் சாஹிப். ஒரு பெரிய கூட்டத்துக்குள் அவர் அலங்காரமாக வீற்றிருந்தார். சந்நியாச ஆச்ரமத்துக்குக்

கொடுக்க வேண்டிய மரியாதையைப் பணிவுடன் அவர் தெரிவித்தார். நாங்கள் எந்த மடத்தைச் சேர்ந்தவர்கள் என்று அவர் விசாரித்துத் தெரிந்துகொண்டார். எங்கள் இருவரின் பூத உடலங்கள் எந்தெந்த மாகாணங்களில் தோன்றியவையென்றும் கேட்டுத் தெரிந்துகொண்டார். தமிழ் நாட்டைச் சேர்ந்தது என் உடல் என்று அவருக்குத் தெரிவித்தேன். தமிழ் நாட்டில் எந்த ஜில்லாவென்று வரம்புக்குமேல் அவர் வினவினர். வட இந்தியாவில் ஒரு சந்நியாசியின் பூர்வ ஆச்ரமத்தைப் பற்றி ஒன்றும் கேட்கமாட்டார்கள். தென்னிந்தியாவிலோ அதைப்பற்றிய பேச்சுத்தான் அதிகமாக இருக்கும். ராவல் சாஹிப்பின் விருப்பப்படி ஜில்லாவைத் தெரிவித்தேன். புன்சிரிப்புப் பூத்தார். "மலையாளம் தெரியுமா?" என்றார். "பேச வராது. பேசினல் விளங்கும்" என்றேன். இத்துடன் ஹிந்தியில் பேச்சு நின்று விட்டது. அவர் மலையாளம் கலந்த தமிழிலும் நான் சுத்தத் தமிழிலுமாக கொஞ்சம் அதிகமாகவே பேசினோம். கூடத்தில் இருந்த வேறு யாருக்கும் எங்கள் பேச்சு விளங்கவில்லை. வியப்புடன் எங்களைப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

"தென்னிந்தியாவிலிருந்து நீங்கள் இங்கு வந்து இப்பெரிய ஸ்தானம் வகிப்பது எனக்குப் பெரு மகிழ்வூட்டுகிறது" என்றேன்.

"அகில இந்தியாவும் ஒன்று என்ற பெரிய ஏற்பாட்டை அந்நாளில் அமைத்து வைத்தார்கள்" என்றார் அவர்.

பிறகு, எங்கள் இருவருக்கும் தங்கியிருக்க அவருடைய அதிதி சாலையில் ஓர் அறை கொடுத்தார். கோயில் பிரசாதமும் அப்போதைக்கப்போது அனுப்பி வைத்தார். அந்த ஏற்பாடு எங்களுக்கு வசதி மிக அளித்தது.

அன்று இரவு ஆலய வழிபாட்டுக்குச் சென்றிருந்தோம். ஆராதனையின் இறுதியில் அனைவரும் அமர்ந்திருந்து பகவத் கீதை படனம் பண்ணினோம். எல்லா மாகாணத்தாரும் அதில் கலந்து கொண்டது காண்பதற்கு அரிய காட்சி.

அடுத்தநாள் பிற்பகலில் அலக்நந்தா நதியின் அக்கரையில் வசித்து வந்த சாது ஒருவரைப் போய்ப் பார்த்து வர வேண்டுமென்று ராவல் சாஹிப் எங்களை ஏவினார். நாங்களும் அதற்கு இசைந்தோம். அந்த சாது மஹாத்மாவின் குடிலை நாங்கள் அறிந்திலேம். ஆதலால் ஆலயப்பணியாள் ஒருவனை எங்களுக்கு வழிகாட்டியாக அவர் அன்புடன் அனுப்பி வைத்தார்.

மற்றவையெல்லாம் சரி. என்னைப் பொறுத்தவரையில் பெருங்குறையொன்று குறுக்கிடலாயிற்று. முற்பகலில் தோன்றிய மலேரியா ஜுரம் பிற்பகலில் அதிகரித்துவிட்டது. உடலெங்கும் வலியும் நடுக்கமும் ஓங்கலாயின. ஆனால் அதைப்பற்றி நான் சம்புத்தானந்த சுவாமிகளிடம் ஒன்றும் சொல்லவில்லை. என்னைக் குறித்து அவர் கவலைப்படலாகாது என்பதே என் கருத்து. நலிவுற்று நடந்து செல்லச் செல்ல மனதில் எண்ணமொன்று உதித்தது. சூடான தேயிலைப் பானம்; அது பொன் போன்ற நிறமுடையது. மணம் நிறைந்தது. உற்சாகம் ஊட்டவல்லது. அத்தகைய பானம் அருந்தினால் மலேரியா ஜுரம் இப்பொழுதே மாயமாய் மறைந்துபோம் என்று மனது கற்பிக்கிறது. ஆனால் அத்தகைய தேயிலைப் பானத்தை இப்பிரதேசத்தில் காண்பதெப்படி? திரும்பவும் நீலகிரிக்குப் போனாலல்லவோ அதைக் காணமுடியும்?

இங்கு மனதுக்குள் மற்றொரு மாறுதல். சிறிது காலத்துக்கு முன்புதான் காப்பி, தேயிலையாகிய பானங்களை நான்

அறவே ஒதுக்கி வைத்தேன். அவைகளைப்பற்றி எண்ணி ஞலே ஒருவித அருவருப்பு. அவைகளைப் பானம் பண்ணுப வர்கள் பைத்தியக்காரர்கள். இப்படி எண்ணி வந்த மனது இப்பொழுது தேயிலைப் பானத்துக்காகத் தவிக்கிறது. ஒளஷதத்தை நாடுவது போன்று அதை நாடுகிறது. 'கிட்டாதாயின் வெட்டென மற' என்பது கோட்பாடு. மனதோ அதை மறக்க மாட்டேனென்கிறது. நோய்வாய்ப் பட்ட மேனியொருபுறம், அதற்குத் தேயிலைப் பானம் தந்தால் குணமடையும் என்று ஹிதோபதேசம் செய்யும் மனம் மற்ளுெருபுறம்; இத்தகைய போராட்டத்துடன் பெரிய வர் ஒருவரைப் பார்க்க நானும் போய்ச் சேர்ந்தேன்.

குடிலுக்கு முன்பு திறந்த திண்ணையொன்று. வெயில், மழை, காற்றுக்குப் பாதுகாப்பு ஒன்றுமில்லை. அத்திண்ணை யில் நாங்கள் நிற்கிறோம். கதவு அடைபட்டிருக்கிறது. உள்ளும் புறமும் ஒரே அமைதி. எட்ட ஓடும் அலக்நந்தாவின் மெல்லிய சலசலப்புக்குக் காது கொடுத்தால் அதைக் கேட்கலாம். அதற்கு அப்பால் பத்ரிநாராயணன் ஆலயத்தி னின்று ஓயாது பிறக்கும் பிரார்த்தனையின் மெல்லிய ஒலி சொப்பன உலகத்தினின்று வருவது போன்று இளங்குளிர் காற்றில் மிதக்கிக்கொண்டு வருகிறது. தலைநிமிர்ந்து மேலே பார்த்தால் பத்ரிநாராயணனது மேனிபோன்ற வெட்டவெளி. வடதிசையில் பார்த்தால் மின்னிக்கொண்டிருக்கும் உறை பனி மலைத்தொடர். எல்லாம் ஒன்று சேர்ந்து சொப்பன உலகம் போன்று காட்சி கொடுக்கிறது.

குடிலின் கதவை வழிகாட்டி அமைதியாகத் தட்டினன். உள்ளே தாழிடப்பெற்றிருந்த கதவும் திறந்தது; புன்னகை பூத்த திருமேனியொன்று வெளியே வந்தது. "இவர்தான்

அவர்" என்று வழிகாட்டி அறிமுகப்படுத்தி விட்டுப் போய் விட்டான்.

அந்தத் தபஸ்வியானவர் இரண்டு மூன்று கம்பளத் துண்டுகளைக் கொண்டுவந்து தரையில் போட்டார். எங்களை அமர்ந்திருக்கப் பண்ணித் தாமும் அமர்ந்துகொண்டார். அவருடைய திருமேனி இத்தரணியிலே தோன்றிய பின் அறுபது ஆண்டுகளுக்குமேல் உருண்டோடியிருக்கலாம். அதற்கேற்ற அறிகுறிகள் அவரது ஆக்கையில் தென்படு கின்றன. மற்றொரு விசேஷம், முதுமையில் இளமையும் பொலிந்து கொண்டிருக்கிறது. கனத்த உடம்பு; அகன்ற முகம்; அது சதா மலர்ந்திருக்கிறது. அகத்தெளிவையும் அதே முகம் விளக்குகிறது.

சுருக்கமாக எங்களை அறிமுகப்படுத்திக்கொண்டோம். நாங்கள் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்தவர்கள் என்றறிந்து, அவர் அகமகிழ்ச்சி கொண்டார்.

"கொஞ்சம் தேயிலைப் பானம் பண்ணுகின்றீர்களா?" என்று அவர் சம்புத்தானந்த சுவாமிகளைக் கேட்டார். 'வேண்டாம்' என்ற விடை வந்தது.

"இதை வேற்றாருடைய இடமாகக் கருதவேண்டாம்" என்றார் அப்பெரியவர்.

கைகூப்பியவராய், "நான் தங்களுடைய இளைய சகோதரன்; வேற்றுமையொன்றுமில்லை; தேயிலைப் பானம் பண்ணும் வழக்கமில்லை" என்றார் சம்புத்தானந்தர்.

பிறகு அப்பெரியவர் அன்பு சொட்டும் முகவிலாசத் துடன் என்னைப் பார்த்தார்.

நான் என்ன பதில் சொல்லியிருக்கக்கூடும் என்று வாசகர்களே யூகிக்கலாம்!

உள்ளே சென்றார்; ஒரு பெட்டியுடன் வெளியில் வந்து உட்கார்ந்தார். பேச்சுக்கிடையில் காரியமும் நடக்கிறது. மண்ணெண்ணெய் அடுப்பு (Primus Stove) ஒன்று பெட்டியினின்று வெளியே வந்தது. இரண்டு நிமிஷத்தில் அது ஊதிக்கொண்டு எரிகிறது. சிறிய கெட்டில் ஒன்றில் நீர் காய்கிறது. அது ஆவி விட்டுக் கொதிக்கிறது. அதே பெட்டியிலிருந்து தேயிலை டப்பா வெளியில் வந்தது. கட்டிப் பால் டப்பா வெளியில் வந்தது சர்க்கரை டப்பாவும் வந்தது. ஆங்கில முறையில் கப்பு, ஸாஸர், கரண்டி, வந்தன. போதாதற்கு விலையுயர்ந்த மேலான முறுமுறுப்பான பிஸ்கோத் (Cream Cracker Biscuits) இரண்டு ஒரு ஸாஸரில் வழங்கப்பட்டன. நான் சங்கற்பித்தபடியே தலைத்தரமான தேயிலைப் பானம்! சாது மஹாத்மா ஒருவர் தம் கைப்படப் பண்ணிய பானம். அதை அவர் அன்புடன் எடுத்து ஏந்தினர். வாங்கி அருந்த அருந்த, ஜுரம் மாயமாய் மறைந்துபோயிற்று. பத்ரிநாராயணன் அருளை வியந்தேன். மற்றொரு பேருண்மையை உணர்ந்தேன். ஓர் இடத்தில் விஷமாயிருப்பது மற்றோர் இடத்தில் அமிர்தம் ஆகலாம்.

பெரியார் ஒருவரைப் பார்ப்பதில் பயன் ஒன்று உண்டு. அவருடைய பருத்த உடலைப் பார்த்து அடையாளம் தெரிந்து வருவது போதாது. அவர் மனத்தகத்துக் காத்து வைத்திருக்கும் மேலாம் கருத்துக்கள் சிலவற்றைக் கேட்டு, அவைகளை நமக்குச் சொந்தமாக்கிவிட்டால் அதுவே சிறந்த இணக்கமாகும். பத்ரிகாச்ரமத்தில் நாங்கள் சந்தித்த இப் பெரியவர் பகர்ந்த சில சீரிய கருத்துக்களும் சம்பவங்களும் வருமாறு:—

கல்கத்தாவுக்கு அருகில் தக்ஷிணேசுவரத்தில் ராணி ராசாமணி என்பவள் காளி கோயில் கட்டுவித்து வைத்தாள்.

பணச்செலவு பண்ணிய பெருமை அவனுக்குண்டு. ஆனால் அந்தக் கோயிலுக்குள் அருளை நிலைநாட்டியவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர். சித்த புருஷர் ஒருவர் வழிபட்ட விக்கிரகத்தைச் சாதாரண விக்கிரகத்தோடு ஒப்பிடலாகாது. அவர் காட்சியில் அது சாக்ஷாத் தெய்வம். அத்தகைய காட்சியினால்தான் அந்த மூர்த்திக்கும் ஸ்தலத்துக்கும் மகிமை வருகிறது. இனி, தக்ஷிணேசுவர ஆலயம் என்றென்றும் புண்ணிய க்ஷேத்திரமே. அது ஸ்ரீ ராமகிருஷ்ணரது சாதனங்களுக்கென்றே தெய்வாதீனமாக அமைந்தது.

அதே பாங்கில் அமெரிக்காவில் சென்ற நூற்றாண்டில் சர்வமதமகாசபை நிறுவப்பெற்றது சுவாமி விவேகானந்தரின் பொருட்டு. அவர் ஒரு ரிஷி. அவர் பகர்ந்ததெல்லாம் ஆப்த வாக்கியம். ஆங்கில மொழியை அவர் புனிதப்படுத்தியிருக்கிறார். மொழியை வளர்ப்பவர் வேறு, மொழியைப் புனிதப் படுத்துபவர் வேறு. பரம்பொருளை சாக்ஷாத்கரித்த சுவாமி விவேகானந்தர் அப்பரத்தைப் பற்றிய செய்தியை ஆங்கில மொழியில் உலகுக்கு வழங்கினார். சுவாமி விவேகானந்தரை அறிய விரும்புபவர் ஆங்கிலம் கற்றாகவேண்டும். மற்றொரு சிறப்பு அவரிடத்துண்டு. "எழுமின், விழிமின், கருதிய கருமம் கைகூடும் வரையில் உழைமின்" என்றார் அவர். உபநிஷத வாக்கியத்தை அவர் இப்படி மாற்றியமைத்தார். उत्तिष्ठत जाग्रत प्राप्यवरान् निबोधत "உத்திஷ்டத, ஜாக்ரத, ப்ராப்யவரான் நிபோதத" என்பது மூலம். 'எழுந்திரு, விழித்திரு, பேராசிரியனை அடைந்து பரத்தை அறிந்துகொள்" என்பது அதன் நேர் மொழிபெயர்ப்பு. அதன்படி மொழி பெயர்க்காது தமது சொந்த முறையில் விவேகானந்த சுவாமிகள் அதை அமைத்துவிடுகிறார். தீர்க்கதரிசி ஒருவருக்கு அப்படிச் செய்ய அதிகாரமுண்டு.

பிறகு தம்மைப்பற்றி அம்முனிவர் இங்ஙனம் மொழிந்தார்:—

நான் முன்பு கல்கத்தாவில் கல்லூரி ஆசிரியனுயிருந்தேன். அப்போது ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துக்குத் தலைவராயிருந்த ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளிடம் அடிக்கடி போவேன். அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வழித்தோன்றல். அவரைப் பார்ப்பதும் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்ப்பதும் கிட்டத்தட்ட ஒன்றே. தலைமை மடம் அப்பொழுது மிகச் சிறியதாயிருந்தது. இப்பொழுது பெரியதாய்விட்டது.

நான் அப்படி ஆசிரியனுயிருந்தபோது விடுமுறை நாட்களில் க்ஷேத்திர யாத்திரை போவதுண்டு. ஒரு தடவை பிருந்தாவனத்துக்குச் சென்றிருந்தேன். கண்ணனது வெவ்வேறு விளையாட்டுகள் நிகழ்ந்த இடங்களைக் காண விரும்பினேன். அதற்காகவென்று பண்டா ஒருவரை நியமித்துக் கொண்டேன். பின்னல் தகராறு ஏற்படாதிருத்தற்பொருட்டு நான் அவருக்குச் செலுத்தவேண்டிய தக்ஷிணையை முதலிலேயே பேசி முடிவுகட்டிக்கொண்டேன். அவரும் சிரமப்பட்டு பல இடங்களுக்கு அழைத்துச் சென்று காட்டினர்.

யமுனை நதியில் ஒரு விசேஷமான துறைக்குப் போய்க் கொண்டிருந்தபோது ஓர் ஒடுங்கிய சந்தில் விளம்பரப் பலகையொன்று மாட்டியிருந்தது. அதைப் படித்தேன். "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாச்ரமத்துக்கு வழி" என்று எழுதியிருந்தது. சற்று அங்கே நின்றேன்.

"அங்கு ஒன்றுமில்லை, வாருங்கள் போகலாம்" என்றுர் பண்டா அவர்கள்.

"இல்லை, அதைப் பார்க்கவேண்டும்" என்றேன் நான். அரைமனதுடன் அவர் என் பின் வந்தார். வளைந்து வளைந்து உள்ளே போய் சேவாச்ரமத்தைச் சேர்ந்தோம்.

"இதை நிர்வகிக்கும் சுவாமிகள் எங்கே?" என்று கேட்டேன். நடுத்தர வயதுள்ள ஒருவர் என் முன் வரவழைக்கப் பட்டார். என்னை நான் அறிமுகப்படுத்திக்கொண்டேன்.

"அனைத்தையும் பார்க்க விருப்பம்" என்றேன். சுவாமிகளும் உவகையுடன் எல்லாம் எனக்குக் காண்பித்தார். நோயாளிகளுக்குத் தக்கமுறையில் பராமரிப்பு நடைபெறுவதைக் கண்டேன். நோயாளிகளை நாராயணனைக் கருதி, அவர்களுக்குப் பணிவிடை செய்யவேண்டுமென்பது விவேகானந்த சுவாமிகளின் சங்கற்பம். அவருடைய மரபைச் சேர்ந்தவர்கள் அச்செயலைச் செய்துவந்தார்கள். அதைக் காண்பது தேவதரிசனத்துக்குச் சமானம் என்று நான் கருதினேன். கடைசியாகக் காரியாலயத்துக்குத் திரும்பிவந்தோம். விடைபெறுமுன் என் பணப்பையை எடுத்தேன். அதை அவிழ்த்து உள்ளிருந்து இரண்டு ரூபாய் தேடியெடுத்து சுவாமிகள் முன்னிலையில் வைத்தேன். சேவாச்ரமத் தலைவராகிய சுவாமிகள் புன்சிரிப்புச் சிரித்தார்.

அவருடைய சிரிப்பு என் மனதைக் குத்தியது. கை கூப்பி நான் அவரிடம் விண்ணப்பித்தேன்.

"சுவாமி, சிறிய தொகையென்று இகழவேண்டாம். இப்பொழுது என் கைவசத்தில் அதிகப் பணமில்லை. ஆகையால்தான் வண்டி வைக்காது நடந்துவந்தேன். கல்கத்தா போய்ச் சேர்வதற்குக் கையில் இருப்பது போதும் போதாததுமாயிருக்கிறது."

சுவாமிகள்: பெரியோய், உங்களை எள்ளிப் பரிகசிக்க நான் சிரிக்கவில்லை. ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருளை வியந்து சிரிக்கிறேன்.

நான் : தேவரீர் அதை எனக்கு விளக்கினால் மகிழ்வடைவேன்.

சுவாமிகள் : இன்று காலை சமையற்காரன், 'நோயாளிகளுக்குக் கஞ்சி காய்ச்சுதற்குப் பொருள் ஒன்றும் பண்டகசாலையில் இல்லை' என்றான். நான் பெட்டியைத் திறந்து பார்த்தேன். அதில் பொருளுமில்லை, பணமுமில்லை. 'பொருளோ பணமோ குருதேவர் கொண்டு வந்து சேர்க்கும் வரையில் காத்திருக்க வேண்டும்' என்றேன் சமையற்காரனிடம். இப்பொழுது அவர் அருளால் பணம் வந்துவிட்டது. அதைக்குறித்து நான் மகிழ்கிறேன்.

சுவாமிகள் சொற்கேட்டு எனக்கு மயிர்க்கூச்சு எடுத்தது. அவர் இயக்கம் இத்தகையது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமக்கென்று பணத்தைத் தொடவில்லை. அவருடைய அடியார்கள் உலக நன்மைக்காகவென்று பணத்தைத் தொடுகிறார்கள். இக்காலத்தில் பணத்தைப் புரளி பண்ணுகிற இயக்கம் இது.

———

# இராமாயணம்

( வால்மீகியைத் தழுவியது )

*தமிழில் இயற்றியவர்*

**ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்**

மக்கள் அனைவர் உள்ளத்திலும் பண்பாட்டை வளர்க்கும் முயற்சியில் இராமாயணம் முக்கிய இடம்பெற்று வருகிறது. இராமாயணத்தின் மகிமை அற்புதமானது. இராமாயணத்தில் அமைந்துள்ள பாத்திரங்கள் மனிதனுடைய அகவுலக வாழ்வில் அமைந்துள்ள தத்துவங்களுக்கு விளக்கங்களாக அமைந்திருக்கிறார்கள்.

இராமாயணத்தில் வரும் சீதை புனிதத்திற்கும் பெண்மைக்கும் உறைவிடம். துயரத்தை அமைதியுடன் சகித்துக் கொள்ளுதல் வாயிலாக அவள் அதை வென்றாள். பெண்ணின் பண்புக்கு முடிந்த குறிக்கோளாக சீதை இலங்குகின்றாள். இராமபாணம் வலிவுக்கும் நேர்மைக்கும் சின்னமாகிறது. அது ஒருபோதும் வீண்போவதில்லை. அறநெறி காப்பவனுக்கு வாழ்க்கையில் சோதனைகள் அதிகம். அவைகளை முறையாகச் சமாளிப்பவன் வாழ்க்கையில் வெற்றி அடைகிறான். இதுவே இராமாயணம் புகட்டும் பாடம்.

# தர்ம சக்கரம்

**மாத சஞ்சிகை**

ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்

1952 ஜனவரி முதல் வெளிவந்து கொண்டுள்ளது

| ஆண்டு சந்தா | | தனி இதழ் |
|---|---|---|
| உள்நாடு | ரூ. 15-00 | ரூ. 1-50 |
| வெளிநாடு | ரூ. 45-00 | ரூ. 4-00 |

ஆன்மீகக் கருத்துக்களில் தெளிவுபெற தர்மசக்கரம் சந்தாதாரராகச் சேர்ந்து பயன் பெறுங்கள்.

ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் நூற்றைம்பது டிபாசிட் செய்து விட்டால் தொடர்ந்து மாதந்தோறும் பத்திரிகை வந்துகொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாசிட் செய்த முழுத் தொகையாகிய ரூபாய் நூற்றைம்பதை திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். டிபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை. விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.

---

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை-639 115. திருச்சி ஜில்லா.

*சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய*

## பெரிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம் | ரூ. 32-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 16-ம் பதிப்பு | ... 28-00 |
| ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (*தமிழ் வியாக்கியானம்*) | ... 26-00 |
| ஞானயோக விளக்கம் | ... 15-00 |
| ராஜயோக விளக்கம் | ... 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... 10-00 |
| மஹாபாரதம் | ... 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... 9-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 8-00 |
| விவேகானந்த விவரணம் | ... 7-50 |
| இராமாயணம் | ... 7-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... 7-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 7-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசமஞ்ஜரீ | ... 6-50 |
| தாயுமானசுவாமி பாடல்கள் | ... 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... 5-50 |
| தினசரி தியானம் | ... 5-00 |
| அம்பிகையின் ஆயிரம் திருநாமங்கள் | ... 4-50 |
| விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள் | ... 4-00 |
| சகோதரி நிவேதிதை | ... 3-75 |
| சுவாமி விவேகானந்தர் | ... 3-50 |
| எதிர்கால இந்தியா | ... 3-00 |

சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய

## பெரிய நூல்கள்

---

| | | |
|---|---|---|
| திருவாசகம் | ரூ. | 32-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 16-ம் பதிப்பு | ... | 28-00 |
| ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (தமிழ் வியாக்கியானம்) | ... | 26-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 15-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| மஹாபாரதம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 8-00 |
| விவேகானந்த விவரணம் | ... | 7-50 |
| இராமாயணம் | ... | 7-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 7-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... | 7-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசமஞ்ஜரீ | ... | 6-50 |
| தாயுமானசுவாமி பாடல்கள் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| தினசரி தியானம் | ... | 5-00 |
| அம்பிகையின் ஆயிரம் திருநாமங்கள் | ... | 4-50 |
| விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள் | ... | 4-00 |
| சகோதரி நிவேதிதை | ... | 3-75 |
| சுவாமி விவேகானந்தர் | ... | 3-50 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |

---

